"கற்றோர்க டாமுகப்பர் கல்விதனி லாசையுள்ளோர்
பெற்றோ மெனவுகந்து பின்புகற்பர்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னெஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

# விவேக சிந்தாமணி.

அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

புத்தகம். 1. 1893௵ பிப்ரவரிமீ. இலக்கம். 10.

## மரத்தின்கனி கீழேவிழுவதேன்?

ஆங்கிலேய தேசத்தில் 'உள்ஸ்தார்ப்பு' நகரத்தில் 250 வருடங்களுக்குமுன் பிறந்த ஸர் ஐஸக் நியூட்டன் என்றஜடதத்துவசாஸ்திரியானவர் ஒருநாள் தன் தோட்டத்திற் சுற்றியுலாவுகையில், அங்குநின்ற வோர் மரத்தின் கனி கீழே விழக்கண்டு, அதன் காரணம் யாதென ஆலோசிக்க லானாரென்று ஓர்கதை சொல்வதுண்டு. அக்கதையின் வாஸ்தவமெங்ஙனமாயினும், இவ்வித்வான் உலகத்தார்க்கு மெய்யறிவூட்டும் உண்மைகள் நிறைந்த சடதத்துவ சாஸ்திரத்தின் அபிவிர்த்திக்காக பலவாறுழைத்து ஆராய்ந்தறிந்த *பிரபஞ்ச முறைமைகளிலொன்றை யின்று சிறிது கவனிப்போமாக.

"மரத்தின்கனி கீழே விழுவதேன்?" என்ற கேள்விக்கு விடையளிப்பது அதிகவருத்தமாக பிரதமதிருஷ்டியிற் றோன்றவில்லை. மரத்தின் கிளையில் தொங்குங் கனியானது அக்கிளையினின்று நெகிழ்ந்தவுடன் ஆதாரமொன்று மில்லாததனால் கீழே விழுகிறதென்பீர்கள்: மெய்யே. ஆனால் ஆதாரமில்லாவிடின் கீழே விழவேண்டிய முகாந்தரமென்ன? தாங்கலில்லாப் பதார்த்தங்கள்யாவும் எவ்விட மிருப்பினுங்கீழேவிழ வேண்டியது கட்டாயமா? சூரியன், சந்திரன், சுக்கிரன், வியாழன் முதலிய கிரகங்களும், ஆகாயத்தையலங்கரிக்கும் அனந்தகோடி †தாராகணங்களும் அந்தரத்தில் ஆதாரவுபற்றியே நிற்கின்றனவோ? அன்றியும் உருண்டைவடிவான இப்பூகோளத்தின் மறுபுறத்தார் நமது பாதத்தின் கீழிருப்பதாக நாமும், அவர்கள் பாதத்தின்கீழ் நாமிருப்பதாக அவர்களும் நினைப்பது சகஜமாயிருப்பதால், மேல் கீழ் என்பதன் பொருள் தான் என்னே? இத்தகைய கேள்விகளுக்கு நியூட்டன் காலத்திற்குமுன் சரியான விடைகளளிப்பது அரிதாயிருந்தது.

சடப்பொருள்களினின்று சரப்பொருள்களை வேற்றுமைப்படுத்து மிலக்கணங்களில், தன் சக்தியினாலோரிடம் விட்டு மற்றோரிடத்திற்கு நகருந்தன்மையொன்று, என்பது யாவருமறிந்த விஷயம். மனிதர் மாத்திரமன்று, விலங்குகளும் †புட்களுந் தத்தமக்கு வேண்டிய வேளையில் ஓரிடம்விட்டு மற்றோரிடம்போகக் கூடிய சக்தியை யுடையனவாக, கல், மண், மரம், கனி முதலியன அவ்விதமான சக்தியற்றனவாயிருக்கின்றன. ஆதலால், மரத்தின்கனி கொம்புவிட்டு நெகிழ்ந்தவுடன், இருந்த விடத்தே யிராது கீழ் நோக்கிச் செல்வது வேறொன்றின் சக்தியினாலன்றோ ஆகவேண்டும். *ஆலம்பனமில்லாப்பொருள்கள்யாவுந்தரைமுகம் போகச் செய்யுஞ் சக்தி யாதென்று அந்தவித்வான் சிந்தித்து உலகத்தார்க்குப்புலப்படுத்திப் பெயரும் பெருமையுமடைந்தார். இச் சக்தியி னிலக்கணந்தான் நாமின்று விசாரணைக்காக வெடுத்துக்கொண்ட விஷயம்.

* Natural Laws. † நக்ஷத்திர கூட்டங்கள்.

† பக்ஷிகள். * ஆலம்பனம்=பற்றுக்கோடு.

சார்பில்லாவிடில், தருவின் பழ மாத்திரமன்று, பூமியினருகுள்ள மற்றெல்லா வஸ்துக்களுந்தரைமீதுவிழுவதுகண்டிருக்கிறோம். தரையோடு சம்பந்தப்படாத பொருள்களெல்லாவற்றையும் பூமியே ஆகர்ஷித்துக் கொள்ளுமானால் இச்சக்தி பூமிக்கே யுரித்து என்றன்றோ தீர்மானிக்கவேண்டும். ஆனால், பூமியும் சடப்பொருளாகையால், மற்றொன்றை யிழுக்குஞ் சக்தி அதற்கெங்ஙனம் வந்தது ? இவ்விதமான சக்தியொரு சடப் பொருளுக்கு மிருக்கு மானால் வேறு பொருள்களுக்கு மிருத்தல் கூடாதா? இவ்விஷயம் மேற்கூறிய வித்வான் நன்காராய்ந்து, எங்ஙனங் காந்த மிரும்பை யிழுக்கின்றதோ, அங்ஙனமே ஜகத்தின்கண்ணுள்ள ஒவ்வொருபொருளும்ஏனையப்பொருள்களை சர்வகாலமும் இழுத்துக்கொண்டிருக்கின்றதென்றறிந்து, இவ்விசித்திரமான சக்திக்கு *சர்வவியாபக ஆகர்ஷணசக்தி யென்றபெயரளித்தார். ஆக, பூமி, பழம்என்ற இரண்டுபொருள்களெடுத்துக்கொள்வோமானால், பூமி பழத்தை யிழுப்பது மாத்திரமல்ல, பழமும் பூமியை யிழுக்கின்றது. அன்றியும் பூமி பழத்தை எவ்வளவு ஊக்கத்துட னிழுக்கின்றதோ அவ்வளவு ஊக்கத்துடன் பழமும் பூமியையிழுக்கின்றது! ஆயினும் பழம் பூமியினிடம் வரக்காணுகிறோமே யொழிய, பழத்தினிடம் பூமி செல்வது யாராவது கண்டதுண்டா? இவ் வாச்சரியத்தின் முகாந்தரம் யாது? ஒரு சிறு திருஷ்டாந்த மெடுத்துக்கொள்வோம். உத்தியோகஸ்தர் முதலிய பெரியோர்கள் புத்தகங்கள் கட்டவைத்துக் கொண்டிருக்குஞ் சிவந்த இந்தியா ரப்பர்வார் நீங்கள் பார்த்திருப்பீர்களே. அதை நன்றாயிழுத்து நீளச்செய்யினும் முன்னிருந்த ஸ்திதிக்குச் சுருங்குஞ் சக்தியதற்குண்டு. அந்தவாரில் ஒரு முழமெடுத்து ஒரு நுனியை யொரு நாற்காலியின்காலிற்கட்டி, அந்தவார் எவ்வளவு நீளுமோ அவ்வளவு நீளவிழுத்து மற்றநுனியை யொரு சிறுகல்துண்டிற் கட்டினால், சம்பவிப்பதுயாது பார்ப்போம். தரையின்மீது கிடக்கும் நாற்காலியுங் கல்துண்டும் இயற்கையாயொன்றை யொன்றிழுப்பதாகக் காணப்படாவிடினும், இரண்டிற்கும் நன்றாயிழுத்துக் கட்டப்பட்ட இந்தியா ரப்பர் பந்த மிருப்பதால், ஒன்றிட மொன்று நகர்வதை நாம் பார்க்கலாம். இவ்விரண்டையுமருகிலிழுக்குஞ் சக்தி வாரின் *குஞ்சனத்துவமேயாயினுங் கல்துண்டன்றோ நாற்காலிபாற் செல்வது காண்கிறோம். இரு பொருள்களையும் ஒன்றோடொன்று பிடித்திழுக்குஞ் சக்தியொன்றே யாயினும், இரண்டும் ஸமமாய் நகராது. ஒன்று மற்றதைவிட அதிகம் நகரக்காரணமென்? ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஒருவேலைக்காரன் ஒரு சாக்கரிசியை யெவ்வளவுதூரமெடுத்துச் செல்வானோ, அதைவிட அதிகதூரம் அரைச்சாக்கரிசியை யதே வேலைக்காரன் அதேகாலத்தில்தூக்கிச்செல்வானென்பதுதிண்ணமன்றோ? நமக்கு ஒரு பெட்டிவண்டியை யெவ்வளவுவழியிழுக்கக்கூடுமோ, அதினுமநேகமடங்கு அதிகதூரங் குழந்தைகள் வைத்து விளையாடுஞ் சிறுவண்டிகளை யதேநேரத்திலிழுக்கக் கூடுமல்லவா? அதுபோலவே, வார் சுருங்குவதால், நாற்காலியுங் கல்துண்டு மிரண்டு மிழுக்கப் படுகின்றனவாயினும், நாற்காலியைவிட கல்துண்டு இலகுவாய் நகரச்செய்யக்கூடியதாகையால், அது அதிக வழிபோகக் காண்கிறோம். நாற்காலியுஞ் சிறுகல் துண்டினிடம் மெய்யா யிழுக்கப்படினும், அது நகரும்வழி அதிசொற்ப மாகையால், நமக்குப் புலப்படுகிறதில்லை. நாம் விளையாடும் பந்தை காலால் பலமாய்த் தட்டினால், அது வெகுதூரம் போகின்றது. அதேபலத்துடன் ஒருபெரிய சவளிமூட்டையைத் தாக்கினால், அது நமது கண்ணுக்குத்தெரியும்படி இடம்விட்டுப் பெயர்வது கூட வருத்தம். அவ்விதமே பழம் தரையில்விழுவதிலும், பழத்தையோசிக்குங்கால், பூமிபிரமாண்ட மாகையால், ஒரே சக்தியானது இவ்விரு பொருள்களையும் பெயர்க்க, அச்சக்தி ஸமநேரத்தில் சிறுகனியை பெரியபூமியைப் பார்க்கிலுமெவ்வளவோ அதிகதூரம் போகச் செய்வதில் விசித்திரமென்னை? பழம் கீழேவர, பூமியுமரே எதிர்கொண்டு போகிறது. ஆனால் கனியை யெந்த சக்தி கீழேயிழுக்கிறதோ, அந்தசக்தியே பூமியை யதேகாலத்தில் மேலே யெழுப்புகிறதினால் பூமி நகரும்வழி யணுநுட்பமாகவே யிருக்கவேண்டும். பூமியினியக்கம் அதிநுட்பமா

* Universal gravitation.

* குறுகிக்கொள்ளும் சக்தி.

கையால் நமதுபுலன்களா லறியக்கூடியதன்று.

ஜகத்திலடங்கிய சகல பொருள்களும் சதா ஒன்றை யொன்று இழுக்கின்றன வென்றும், பூமியினருகாமையிலுள்ள பொருள்கள் யாவும் பிடிப்பில்லாவிடில் தரையில் விழுந்தன்மையனவா யிருக்குங் காரண மின்னதென்றுங் கூறினோம். அதுநிற்க, ஆகர்ஷண சக்தியின் மூலமாய் வஸ்துக்கள்யாவும்பெற்றிருக்குமோர் இலட்சணத்தைச் சிறிது விசாரிப்போம். ஒருபுத்தகத்தை கையில் தூக்குவோமானால், அது கனமாய்த் தோன்றுகின்றதே. காரண மென்ன? தரையின்மீது கிடக்கும் புத்தகத்தை கையிலெடுப்பதால் நாம் வாஸ்தவத்திற் செய்வது யாது? பொருள்களொன்றோடொன்றுநெருங்கி ஐக்கிய மாகுமியற்கைக்குணமுள்ளனவாயிருக்க, அத்தன்மையை விளைவிக்கும் பூமையக்கவர்ச்சிக் கெதிராயன்றோ நாம் பூமியினின்று அப்புத்தகத்தை வேறுபடுத்துகின்றோம். அதுபற்றியே அவ்வஸ்து கனமுள்ளதாகத் தோன்றுகின்றது. நீங்களொருமேசையைத் தூக்கிப்பார்த்த பின்பு அம்மேசையின் காலைப் பிடித்தொருவர் கீழேயிழுக்க நீங்களதைத் தூக்குவீர்களாயின் முன்னிலு மதிககனமாயன்றோ தோன்றும். இவ்விசேஷ கனத்திற்குக் காரணம் மேசையின்காலை யொருவர் கீழே பிடித்திழுப்பது தானே. அதுபோல சாதாரணமா யெல்லாப் பொருள்களுக்கு முள்ள கனத்திற்குக் காரணம், அவைகளுக்கு அதோகதி பயக்கும் பூமியின் ஆகர்ஷண சக்தியேயன்றி வேறல்ல. கனமெனப்படுவது ஒரு பொருளின் இயற்கைக்குணமன்று; பூமியின்கவர்ச்சி பலத்தால் திர்மானிக்கப்படும்குணமாயிருக்கிறது. ஆகையால் ஒரேபொருள் ஓரிடத்தோர் கனமாகவும், மற்றோரிடத்து வேறுகனமாகவு மிருக்கக் காணலாம். பொருள்களை பூமியின் மையம் நோக்கிச்செலுத்துஞ் சக்தியின் பலம் பூமியிலெல்லாவிடங்களிலும் சமமாயிருக்குமானால், ஒரேபொருள் ஓரிடத்தோர் கனமாகவும், வேறோரிடத்து வேறு கனமாகவுந் தோன்றாது. ஆனால், மெய்யாகவே பூகோளத்தின் வடமுனை தென்முனைகளைச் சமீபிக்க, பூமையக் கவர்ச்சியின் பலம் பலகாரணங்களால் சிறிது குன்றுவதால், பொருள்களின் தூக்கமும் அவ்விடங்களினருகுசெல்ல கிஞ்சித்து குறைகின்றது. கவர்ச்சியின் பலத்திற்குத் தகுந்தபடியே [1]கனமு மிருக்குமாதலால், பூமியின் [2]நிறை தற்கால மிருப்பதிற் பாதியாகவோ இரட்டிக்கவோ செய்தால், பொருள்களின் கனமும் முறையே பாதியாகவு மிரட்டிக்கவுஞ் செய்யப்படுமென்பது சிறிது ஊன்றிவாசிக்க விளங்கும்.

சகலபொருள்களு மொன்றையொன்று சதா இழுக்கின்றனவென்று கூறினோம். பொருள்களெல்லாம் [3]அவ்வியாகிருதவணுக்களாற் சேர்க்கப்பட்ட [4]வியாகிருதவணுக்களின் திரட்சியென்பது சடதத்துவ சாஸ்திரிகளின் கொள்கை. கவர்ச்சிசக்தியின் பாவிகத்திற்கு இரண்டுபொருள்கள்இன்றியமையாதன வாகையாலும் பொருள்கள் தத்தமக்குரிய விசேஷ சுபாவங்களனைத்தும் பொருந்தியிருக்கும் ஸ்திதிகளில் வியாகிருதவணுத் தன்மையே தாழ்ந்த தாகையாலும், ஒருபொருளி னெவ்வொரு வியாகிருதவணுவும் ஏனைய பொருள்களின் ஒவ்வொரு வியாகிருதவணுக்களையும் ஆகர்ஷிக்கின்றது. என்று சொல்லலாம். ஆகையா லெங்ஙனம் நெல்லு முதலிய தான்னியங்களளக்குங்கால் ஆழாக்கு, உழக்குகளையும், நீளமோ அகலமோ குறிக்குங்கால் அங்குலம், சாண் முதலியவைகளையும், சமய மளவிடுகையில் நொடி, வினாடிகை யிவைகளையுந்தாழ்ந்த அளவுகளாய் வைத்துக்கொள்ளுகிறோமோ, அங்ஙனமே கவர்ச்சிசக்தியின்பலம் நிர்ணயப்படுத்துவதில், இரண்டு வியாகிருதவணுக்கள் ஒன்றை யொன்று ஆகர்ஷிக்கும் சக்தியே தணிந்த வளவாக விருப்பினும், இவ்வணுக்கள் கண்களுக்குப் புலப்படத்தக்கவையல்ல வாதலால், புலன்களாலுணரக்கூடிய ஓர் நிறையையெடுத்து, அந்நிறையுள்ள இரண்டுபொருள்கள் ஒன்றை யொன்று இழுக்கும் வலிமையை அளவிற்காதாரமா யெடுக்க வேண்டியதாகிறது. திருஷ்டாந்தமாக ஒரு கழஞ்சு நிறையுள்ள இருபொருள்கள் தம்முள் செலுத்து மாகர்ஷண சக்தியை தாழ்ந்தவளவாக அல்லது ஏகமாக வெடுத்துக்கொள்வோம். இவ்விரு பொருள்களில் யாதேனு மொன்றின் நிறை இருகழஞ் சாக்கப்படின், இவ்விருகழஞ்சுகளுந் தனித்தனியே மற்றப்பொருளில் ஒரு

1 Weihgt. 2 Mass 3 Atoms 4 Molecule.

கழஞ்சையிழுப்பதால், ஆகர்ஷண சக்தியின் பலம் முன்னினு மிருமடங்காகவே யிருக்கவேண்டும். ஒருபொருளை யிருகழஞ்சு நிறையுள்ளதாகவும் மற்றப்பொருளை மூன்று கழஞ்சுநிறையுள்ளதாகவும் செய்தால், ஒரு பொருளின் ஒவ்வொரு கழஞ்சும் மற்றப்பொருளினெவ்வொரு கழஞ்சையு மேகபலத்துட னிழுப்பதால், இவ்விருபொருளின் கவர்ச்சி சக்தி நாமெடுத்த அளவுக்கு ஆறுமடங்காகின்றது. அவ்விதமே ஒரு பொருளின் நிறை அரைக்கழஞ் சாகவும் மற்றதின் நிறை இருகழஞ்சாகவு மிருந்தால், இருபொருள்களின் கவர்ச்சியளவு ஏகமாகின்றது. இவ்விரு பொருள்களிலொன்று பூமியெனக்கொண்டால், பூமியின் நிறை மாறாமலிருக்க, மற்றப்பொருளின் நிறை கூடவோ குறையவோ செய்தால், அதற்கும் பூமிக்குமுள்ள ஆகர்ஷண சக்தியும், அதுடன் அப்பொருளின் கனமும், அதேயளவிற் கூடவுங் குறையவுஞ் செய்யும். பூமியின் நிறை பாதியாகவோ இரட்டிக்கவோ மாற, மற்றப்பொருளின் நிறை நிலையாயிருந்தால், ஆகர்ஷண சக்தியின் ஊக்கமும், அதன் நிமித்தம் அப்பொருளின் கனமும், முறையே பாதியாகவோ இரட்டிக்கவோ மாறும்.

இருபொருள்கள் தம்முள் நிகழும் ஆகர்ஷண சக்தியினூக்கமானது அப்பொருள்களின் நிறைகளைக் குறிக்குந் தொகைகளின் *பெருக்கத்தால் அளவிடத்தக்கதென்று முன்கூறியவற்றாலறியலாம். இனி இச்சக்தியின் பலம் தொலையிலும் சமீபத்திலு மொன்றுபோ லிருக்கின்றதா பார்ப்போம். சமீபத்திலுந் தொலையிலும் ஊக்கமொன்றாகவே யிருக்குமானால் நமது பூமியைவிட 1300 மடங்கு பருமனும், 300 மடங்கு கனமுமுள்ள வியாழனும், 12,50,000 (12½ லக்ஷம்) மடங்கு பெரிதும், 3,50,000 (3½-லக்ஷம்) மடங்கு கனமுமுள்ள சூரியனும், இவைகளிலுமெவ்வளவோ அதிகம் பரிமாணமுள்ளன வாகி கணக்கிற்கடங்காத *விண்மீன்களு மிருக்க, இவைகளின் மையம் நோக்கிச் செல்லாமல், பூமியின் மையமே நோக்கிப் பொருள்கள் செல்லக்காரணமில்லையே. பூமியினருகாமையிலுள்ள பொருள்கள் பூமி நோக்கவே விழுவதால், 9,20,00,000 (9 கோடியே 20 லக்ஷம்) மயில்களுக்கப்பாலிருக்கு மிரவியும் *38,40,00,000 (38கோடியே 40லக்ஷம்) மயில்களுக்கப்பா லிருக்கும் பிரகஸ்பதியும், பூமியின் கவர்ச்சிக் கெதிராய் இங்குள்ள பொருள்களை தம்மிடமிழுக்க சக்தியற்றனவா யிருக்கின்றன வென்பது உள்ளங்கை நெல்லிக் கனிபோல் விளங்குகின்றது. தொலையினால் ஆகர்ஷண சக்தியின் வலிமை குன்றாம லிருக்குமானால், மரத்தின்கனி பூமியின் மையம் நோக்கிச்செல்லும் விசையிலும் இரண்டு மூன்றுலட்சம் மடங்குவிரைவாய்சூரியன் மையம் நோக்கிச் செல்லவேண்டும். அவ்விதஞ் செல்லாது பூமியினிடமே விரைந்தோடுகின்றதாகையால், அதிக தூரம்போக, ஆகர்ஷண சக்தியின்வலிமை குறையுமென்று சொல்லவேண்டும். ஆகர்ஷண சக்தியின் வலிமைக்கும் தூரத்திற்குமுள்ள சரியான பாந்தவ்வியத்தை ஸர் ஐஸக் நியூட்டன் என்ற வித்வான் கணிதநூல் விதிகளால் வற்புறுத்தி யிருக்கின்றார். அப்பந்தம் யாதெனில், இரண்டு பொருள்களின் தூரத்தை இருமடங்காக்க, அவைகளின் ஆகர்ஷண சக்தி நாலிலொன்று பலமுள்ள தாகுமென்றும், தூரத்தை மும்மடங்காக்கினால், ஆகர்ஷண சக்தி ஒன்பதிலொன்று பலமுள்ளதாகுமென்றும் தூரம் நாலுமடங்காக, ஆகர்ஷண சக்தி பதினாறிலொன்று வலிமையுள்ள தாகுமென்றும், அவ்விதமே தூரத்தை பத்து மடங்காக்கினால், ஆகர்ஷணசக்தியினூக்கம் நூற்றிலொன்றாய் விடுமென்றும், அவர் ஸ்தாபித்தார். பூமியின் தரைமீதிருக்கும் பொருள்கள் பூமியின் மையத்திலிருந்து சுமார் 4,000 மயில் தூரத்திலிருக்கின்றன. ஆகவே பூமியின் தரையில் 8-துலா மல்லது 800 பலந் தூக்கமுள்ள ஒரு சர்க்கரைக் கட்டி யாதேனும் ஒருபாயத்தால் பூமிக்குயரே 40,000 மயிலுக்கப்பால் கொண்டு போகப்படின், பூமையக் கவர்ச்சியி னூக்கங் கால் வாசியாக, அக்கட்டின் தூக்கம் 800-ல் கால்வாசி யல்லது 200 பலமாய்விடும். அப்படியே பூமியின் மையத்திலிருந்து அக்கட்டின் தூர மும்மடங்காக்கப் பெறின், கவர்ச்சியின் வலிமை ($\frac{1}{9}$) ஒன்பதிலொன்றாய் கனமும் 89 பலமாய் முடியும். அங்ஙனமே பூமையத்தினி

* Product, * நக்ஷத்திரங்கள்

* சூரியன்.

ன்று தூரம் நாலுமடங்காக ஆகர்ஷண சக்தியின் வலிமை ($\frac{1}{16}$) பதினறில் ஒன்ருய் கட்டின் தூக்கமும் 50 பல மாகும். தூரம் பத்து, இருபது, நாற்பதுமடங்குகளாக சர்க்கரைக்கட்டின் கனமும் முறையே 8 பலம், 2 பலம், $\frac{1}{2}$ பலமாகும். பூ மையத்திலிருந்து சந்திரமண்டலமிருக்குந் தூரத்தை யடைந்தால், பூமியின் தரையில் 800 பலந்தூக்கமிருந்த சர்க்கரைக்கட்டு $\frac{1}{4}$ பலத்தூக்கமே யிருக்கும். இங்ஙனம் பூமிவிட்டதிகந்தூரம் போகப்போக, பூமியின் கவர்ச்சி பலங் குறைந்தே வருவதால், பதார்த்தங்களின் கனமுங் குறைந்தே வரும். பூமிக்குயரே போதுமான தூரத்திலொரு பொருளிருந்து வேறென்றுலு மிழுக்கப்படா விடின், அதற்கு கனமேயிராது. அன்றியும், அந்தூரத்திலிருக்குமோர் பொருளை பூமியும் வேறு கிரகங்களும் சமசக்தியுட னிழுக்குமாயின் அப்பொருளொன்றினிடமுஞ் செல்லாது நிலையாய் நின்று கனமிலாது முடியும். பூமியின் கண்ணுள்ள பொருளொன்று யாதேனுமொரு மாயவித்தையால் சந்திரமண்டலத்திற்குப் போகுமாளுல், அது எவ்வளவோ கனங் குறைந்த தாகவும், வியாழ மண்டலத்திற்குப் போகுமானுல், இங்குள்ளதிலும் 300 அல்லது 400 மடங்கு கனமுள்ளதாகவும் பவிக்கும். இது பற்றியே ஒரு பொருளின்கனம் அப்பொருளி னியற்கை குணங்களிலொன்றல்ல வென்று முன்னர் கூறினேம்.

நூல்களினிலக்கணங்களி லொன்று ஆங்காங்கு கண்ட திருஷ்டாந்தங்களி லிருந்து அவை போன்ற மற்றெல்லாவற்றிற்கும் பொருந்தும் படியான ஒரு பொது விதி நிலைநிறுத்துதலாகையால், அதற்கிணங்க, முற்கூறிய திருஷ்டாந்தங்களி னுதவியால், தூரத்திற்குங் கவர்ச்சிக்குமுள்ள சம்பந்தத்தை பொதுவிதியாய்ச் சொல்லலாம். தூரமெவ்வளவு அதிகப்படுகின்றதோ அவ்வளவின் ¶வர்க்க சங்கியையெடுத்து, அதற்கு ஒன்றை ஈவு கொடுத்தால் வரும் பின்ன சங்கியையே ஆகர்ஷண சக்தியின் வலிமையைக் குறிக்கு மென்பதே பொதுவிதி. இது நிற்க, பூமியினருகாமையி லிருக்கும் வஸ்துக்கள் ஆதர வில்லாவிடில் கீழே, அதாவது பூமியின் மையத்தை நோக்கிச்செல்வதுபோல, தாங்கலின்றி அந்தரத்தில் நிற்கும்பூமியையும் ஆகர்ஷிக்கக்கூடிய பொருளொன்று மிலதோ? உளதேல், பூமி எனதனிடம் போய்ச் சேரவில்லை? என்று கேட்கிறீர்களோ! பூமி எவ்விதம் மரத்தின்கனியை யாகர்ஷிக்கின்றதோ அதுபோலவே பூமியையும் ஆகர்ஷிக்கக் கூடிய பிரமாண்டமான பொருளொன்றுண்டு. அது தான் சூரியன். ஆயினும்பூமி, சூரியனது தரையில்விழாது நிற்பதின் காரணம் யாது பார்ப்போம். மரத்தின்கனி பூமியின் மையம் நோக்கி விழுவதில் பூமிக்குங் கனிக்குமிருக்குங் கவர்ச்சிக்குசற்றேனு மொப்பிடக் கூடியதாக வேறு பொருளுக்குங் கனிக்குங் கவர்ச்சி யிருந்து பூ மையக்கவர்ச்சியைத் தடுக்குமானல், கனி கீழே நேராய் விழாது. ஓர் கயிற்றில் கல்லைக்கட்டி கவண் சுற்றுகையில் கயிறுசுற்று நெகிழ்ந்தாலும் அறுந்தாலுங் கல்பறந்துபோய், தரையில் நேராய்விழாமல்சாய்ந்து அல்லதுவளைவாய்விழுகின்றது. தண்ணீர் தங்கி யிருக்குந் தடாகத்தில் நீந்திஞல், விழுந்தவிடத்திற்கு நேராய் எதிர்க்கரை சென்றேறலாம். ஆனல் பிரவாக காலத்தில் ஒரு ஆற்றில் விழுந்து அக்கரைபோய்ச் சேரச் செல்வோன் நீரோட்டத்தின் வலிமையால் அப்படி நேராய்க் கரையேற முடியாமல் தடையுண்டு தொலையிற்சென்றுதான் கரையேறுவான். அதுபோலவே, பூமிக்குஞ் சூரியனுக்குமுள்ள கவர்ச்சியைத் தடுக்க வேறொன்று மில்லாவிடில், பூமி ஞாயிறிடந்தான் போய்ச்சேரவேண்டியது. ஆனல் பூமியிற்பெரிதும், ஏகதேசம் சமமுங் குறைந்ததுமான பல கிரகங்களுங் கூட பூமியை யிழுத்துக் கொண்டிருப்பதால், ஒரு பொதுவழியாய் *அருக்கனைச் சுற்றி பூமி செல்லுகிறது. ஒருமஞ்சத்தின் கால்களிலொன்றில் கயிறுகட்டி கிழக்கு நேராயொருவனும் தெற்கு நேராயொருவனு மிழுப்பானுனல், அக்கட்டில் கிழக்கும் போகாமல் தெற்கும் போகாமல், இருதிசைக்கும் மத்தியாகிய தென்கிழக்கு நேராய்ச்செல்லும். வண்டி வேகமாய்ப் போகையில், அதிலிருப்பவன் ஒருகல்லைக் கீழே யெறிந்தால், அக்கல் வண்டியின் நேர் வேகத்தையும், கீழ்நேராக வெறிந்த வேகத்தையும் பெற்று, எ

¶ Square அதாவது ஒருஎண்ணை அதே எண்ணல் பெருக்கி வந்த தொகை.

மாத்திரமே இப்பிரதிகாரச் சுதந்திரத்தை நட படிக்கைக்குக் கொண்டுவரலாம்.

4. ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் சுயேச்சையாய்ச் சஞ்சரித்தற்குரிய சுதந்தரமும் மேற்கூறிய சுதந்தரத்தைப்போலவே இகத்தில் மனிதருக்கு நியமிக்கப்பட்டிருக்கும் கடமைகளைச் செலுத்துவதற்கு ஆவசியகமாயிருக்கிறது. அசையாமல் ஒரே இடத்திலிருந்தால் நம்முயிரைக் காப்பாற்றிக் கொள்ளுவதும் வேறும்மனிதருடன் சகவாசஞ் செய்வதும் அசாத்தியமாய்த் தீர்ந்துவிடும். நிலத்திலும் சலத்திலும் நம்மனஞ் சென்றபடி சஞ்சரிக்கலாமென்பதே இச்சுதந்திரத்தின் தாற்பரியம்.

2-ம். பிரிவு - சொத்து.

5. பிரத்தியேக சுதந்தரங்களில் மேற்கூறிய சுதந்தரங்களுக்கு மாத்திரம் தாழ்ந்து மற்றெல்லாச் சுதந்தரங்களை விட உயர்ந்திருப்பது சொத்திற்குரிய சுதந்தரமென்பதில் சந்தேகமில்லை. இதைப்பற்றி ஆலோசித்துத் தீர்மானிக்கவேண்டிய விஷயங்களிரண்டுள. அவைகளாவன:— 1) இச்சுதந்தரத்தி னிலக்கண மென்ன? சொத்தின்சொந்தக்காரனுக்குச்சட்டத்தினாற்கிடைக்கக்கூடிய சுதந்தரங்கள் எவை? இவைகளால் பிறர் உட்படவேண்டிய நிர்ப்பந்தங்கள் எவை? (2) சொத்தின் சொந்தக்காரனுடைய சுதந்தரங்களுக்குள்ள வரையரைகள் எவை?

6. இவ்விரண்டுவிஷயங்களில் முதலாவதெடுத்துரைக்கப்பட்டதைக் குறித்து ஆரம்பத்தில் பிரஸ்தாபிப்போம்.

சொத்திற்குரிய சுதந்தரம் நான்கிலக்கணங்களுடன் கூடியிருக்கிறது. (1) சொந்தக்காரன் சொத்தை யுபயோகிக்குங்கால் பிறர் தடுக்காதிருத்தல். (2) சொத்தைச் சொந்தக்காரன் மாத்திரம் உபயோகித்தல்; அதாவது, எக்காலத்தும் அச் சொத்தை உபயோகப்படுத்தக் கூடாதிருத்தல் (3) சொந்தக்காரன் சொத்தை முற்றிலுமாவது பாகம் பாகமாயாவது அழித்தற்கு அதிகாரத்தை யுடைத்தாயிருத்தல். (4) சொந்தக்காரன் சொத்தைப் பிறருக்குத் தானமாகவாவது ஆஸ்தியாகவாவது கொடுத்தற்கான அதிகாரத்தை யுடைத்தாயிருத்தல். இவற்றில் ஒவ்வொன்றைப்பற்றியும் விவரித்துக் கூறுவோம்.

(1) சொத்திலுள்ள சுதந்தரத்தைக் குறித்து ஆலோசிக்குங்கால் முதலில் விளங்குகிற இலக்கணம் யாதெனில், பிறரால் தடுக்கப்படாது அவைகளை நம்முடைய ஆவசியகத்திற்கும் விருப்பத்திற்கும் தக்கபடி உபயோகித்துக்கொள்ளுவதே. நாம் ஒருபொருளை உபயோகித்துக்கொண்டிருந்து பின் அதைவிட்டுவிட்டால் பிறர் அதை நம்மால் தடுக்கப்படாது உபயோகிக்கலாம்; நாம் ஒருபொருளை உபயோகித்துக் கொண்டிருக்கையில் நம்மைத் தடுக்காது நம்முடன் கூடியும் உபயோகித்துக் கொள்ளலாம். உதாரணமாக, நம்மால் சம்பாதிக்கப்பட்டபணத்தை நாம் செலவிடுகையில், நம்மைத்தடுக்கப் பிறருக்கு அதிகாரமில்லை. ஒருகுளத்தில் நாம் ஒருகல்லில் வஸ்திரத்தை அடித்து வெளுக்கையில் நம்மை ஒருவரும் தடுக்கக் கூடாது. நாம் அக்கல்லை விட்டுப்போனால் பிறர் அதை உபயோகிக்கலாம். அதேகல்லில் ஒரு துறையில் பலர்கூடி நீராடுவதற்குத் தடையில்லை. மேலும் மனிதரின் ஆவசியகத்திற்கு உபயோகப்படும்படியான நிலைமையிலிருக்கும் ஒரு சொத்து மனிதரின் பிரயத்தனத்தாலுண்டாகாமல் இயற்கையாகவே உண்டாயிருந்து அதை அனேகர் ஒரேகாலத்தில் உபயோகிக்கக் கூடியதாயிருந்தால், ஒருவராவது சிலர் கூடியாவது பிறர் அதை உபயோகித்துக் கொள்ளுவதைக் தடுக்கக்கூடாது. ஏனெனில், இப்படி தடுத்தலால் அச்சொத்தைக்கொண்டு மனிதர்பெறக் கூடிய உபயோகம் குறைந்து போகின்றது. உதாரணமாக, பொதுவாய்ச் சனங்கள் காற்று வாங்கி உலாவித்திரிந்து சுகம் பெறுவதற்குபயோகமாகிய ஒருவெளியான பிரதேசத்தை வெவ்வேறுபாகங்களாக வகுத்துச் சிலருடைய சொந்த உபயோகத்துக்குக் கொடுப்பது சரியல்ல. இதுவும்தவிர, பல மாதிரியில் உபயோகிக்கக்கூடிய ஒருசொத்தை ஒருவர் ஒருமாதிரியில் உபயோகித்து வந்தால், மற்றவர் அச்சொத்தை இதரவிதங்களில் உபயோகித்துக் கொள்ளுவதற்கானசுதந்தரம் நீங்கிவிடாது. உதாரணமாக, ஒருதோட்டத்தின் வரும்படியை அதன்

சொந்தக்காரன் அனுபவித்துவந்தாலும், அதன் வழியாய்ப்போகும் ஒற்றையடிப்பாதையில் நடத்தற்குப் பிறருக்குச் சுதந்தர மிருக்கலாம். பாய்ச்சலுக் குபயோகப் பட்டுக்கொண்டிருக்கும் ஒரு ஆற்றில் தோணிகள் போகக்கூடியதாயிருந்தால் பயிரிடுகிறவர்களும் தோணிக்காரர்களும் ஒருவர்மற்றொருவனைத்தடுக்கக்கூடாது.

(2) மேற்கூறியதைச் சொத்திற்குரிய சுதந்தரத்தின்பிரதான இலக்கணமாகச்சாதாரணமாய் ஏற்றுக்கொள்ளுவதில்லை. ஒரு சொத்தை நாம் உபயோகிக்காதிருந்தாலும் பிறர் அதில் பிரவேசித்து பிரயோசன மடையச் சுதந்தரமில்லை. யாராவது இப்படி பிரவேசிக்குங் காலத்தில் அவரைத் தடுத்து அப்புறப்படுத்தி நாம் அதை வேண்டியபடி உபயோகித்துக்கொள்ள நமக்குச் சுதந்தர மிருந்தால் அச்சொத்து நமக்குச் சொந்தமென்று கூறப்படும்.

ஆகாரத்தைப் போன்ற சில சொத்துக்கள் ஒருதடவை உபயோகிக்கப் படுவதினால் நைத்துப்போகுஞ் சுபாவத்தை உடைத்தா யிருக்கின்றன. பிறரைத்தடுத்து அவற்றை நமது வசப்படுத்திக் கொண்டாலன்றி நாம் அவற்றை வேண்டியபடி அனுபவித்துக் கொள்ள முடியாது. அப்படியே ஒருவயலை நன்றாய் உழுது பயிர்செய்து விளைவை அனுபவித்தற்கு உழவு நாளின் தொடக்கம் முதல் அடுத்த அறுப்புக் காலம் வரையிலாவது பிறரை விலக்கி நாம் மாத்திரம் இந்நிலத்தை உபயோகிக்கும் சுதந்தரத்தை உடைத்தா யிருக்கவேண்டும். மேலும் இப்படி பிறரைவிலக்கும் சுதந்தர மில்லாதிருந்தால் உபயோகமுள்ள சாமான்களை உற்பத்தி செய்வதில் மனிதருக்குள்ள ஊக்கம் மடிந்துபோகும். நாம் சொத்தை உபயோகிக்கும் தருணத்தில் மாத்திரம் பிறருடைய தடையின்றி இருந்து நம்முடைய உபயோகம் தீர்ந்தவுடனே அவர் பிரவேசிக்கக் கூடியதா யிருத்தல் உலகத்தின் அபிவிர்த்திக்குப் போகாது.

(3) நாளடைவிலாவதுஒரேதடவையிலாவது சொத்தை யழித்தற்குள்ள பாத்தியம் அச்சொத்துக்குரிய சுதந்தரத்தின் மூன்றாவது இலக்கணமாகின்றது. நம்முடைய ஆகாரம் உண்ணப்படுவதால் ஒரேதடவையில் அழிந்து போகின்றது; நமது உடை நாளடைவில் கொஞ்சம் கொஞ்சமாய் அழிந்து போகின்றது. சொத்து முழுவதையும் ஒரே தடவையாய் அழிப்பதற்கும், சிறிது சிறிதாய் தன்மனஞ் சென்றபடி அழிப்பதற்கும், அதன் சொந்தக் காரனுக்குச் சுதந்தரமுண்டு.

மனிதரால் தகுந்தபடி உபயோகிக்கப் படுவதினால் சில சொத்துக்கள் ஒருகாலத்தும் அழிவை யடைகிறதில்லை. அழிவடையாது மனிதருக்கு உபயோகமாய்க் கொண்டுவந்தாலும் அவற்றைத் தக்கபடி உபயோகிக்காவிட்டால் எவ்விலக்கணங்களினால் அவை மனிதருக்கு எக்காலத்தும் உபயோகப்பட்டு வருகின்றனவோ அவ்விலக்கணங்கள் அழிந்துபோம். இதற்குப் பயிரிடப்பட்டு வரும் நிலத்தை உதாரணமாய்க் கூறலாம். ஒரு நிலத்தை அதன் சொந்தக்காரன் குத்தகைக்கு விட்டுக்கொடுத்தால் அதைப் பயிரிடுவதால் அதன் செழிப்புகுன்றாது வியவசாய சாஸ்திரப்பிரகாரம் அதைப் பயிரிட்டுவர குத்தகைக்கு வாங்கி யிருப்பவன் நிர்ப்பந்தப் பட்டிருக்கிறானென்பதிற் சந்தேகமில்லை.

(4) உயிரோ டிருக்கையில் மனதிற்கிசைந்தபடி சொத்தைப் பிறருக்குத் தானஞ் செய்தலும், விற்கையும் அச்சொத்திற்குள்ள சுதந்தரங்களில் சேர்ந்திருக்கின்றன வென்று சதாரணமாய்க் கொள்ளப்பட்டிருக்கிறது. ...ும

மரணசாதனத்தினால் தன் நடுநிசியில, வினியோகிக்கும் சுதந்தரமும் அவன் மணமனைவி ஒருவா றுண்டென்றே வேண்டி, நம் நற்கூத் எவனுக்குத் தன் சொத்தை அங்கு மணம்புரிக் குத்தானம் செய்யவல்லரும் தம்முள் பிரியா அவனுக்கு மாத்திரமே எல்லா நன்மையையும் எச்சொத்தைத் தா

அதிகார மில்லாத... றவ, கேளும்! இதோ, காலைக் வரையில் அதிலிரு... து.

யைச் சுயேச்சை... ன்னரசியே, நாமும் இவ்வீர ளுஞ் சுதந்தரமா... ந்து அது செல்லுமிடத்துக்கு வனுக்கு அச்செ... வோம்; நாம் சந்திரனிலும் வேக வினியோகம்... று வருவோமல்லேமோ?

தேசத்தில்... சந்ததியிரா.—என்னவே, நாம் ஒம்பொழுது வினிரே இவ்விரவில் இம்மானிடரிடையிற் கிட ...துறங்கும்படி சேர்ந்தது இன்னவாறென்று

7. மேல் விவரிக்கப்பட்டிருக்கும் இலக்கணங்களையுடைய சொத்திற்குள்ள சுதந்தரத்தைத் தற்காலத்தில் நாகரீகமடைந்த சங்கங்களில் சனங்கள் இரண்டுவிதமாய் அடைந்து வருகிறார்கள்:—

(1) எந்தச்சொத்து ஒருவனுக்குச் சொந்தமாய் விட்டதோ அந்தச்சொத்தை அவனால் தானஞ் செய்யப்பட்டாவது, விற்கப்பட்டாவது, மரணசாதனத்தால் வினியோகிக்கப் பட்டாவது மாத்திரமே பிறர் அடையலாம். இம் மூன்று வழிகளைத்தவிர வேறு வழிகளில்லை.

(2) இதுவரையில் ஒருவராலும் சொந்தமாக்கப்படாத சொத்தைக் குறித்து, எவன் அது விஷயத்தில் தன் பிரயத்தினத்தைச் செலுத்துவதினால் மனிதரின் ஆவசியகத்திற்கு உபயோகமாகு மிலக்கணத்தை அதற்குண்டாக்கிக்கொடுக்கிறானோ அவனே அதற்குச் சொந்தக்காரனாகிறான்.

இரண்டாவது வகுப்பிற் சேர்க்கப்பட்டிருக்கும் சொந்தமாக்கப்படாத சொத்தைப்பற்றி முதலிற் பிரஸ்தாபித்து, ஒருவனுக்குச்சொந்தமாய்விட்ட சொத்திலுள்ள சுதந்தரங்களைக் குறித்துக் கடைசியாய் எழுதிமுடிப்போம்

(இன்னும் வரும்.)

கி. சுந்தரராமன், எம்., ஏ.

---

## நடுவேனிற்கனவு.

நான்காவது அங்கம்.

1-வது இடம்: காட்டில் முற்கூறிய இடமே.

லைசாண்டர், டெமட்ரியஸ், ஹெலனா, ஹெர்மியா, உறங்கிக்கொண்டிருக்கும் இடம்.

[டிடேனியாவும் பாட்டமும், பயற்றம்பூ, சிலம்பிக்கூடு, பாச்சை, கடுகுவிரை முதலிய கந்தர்விகளோடு வருதல். ஒபரான் பின்னால் மறைந்து நிற்றல்.]

டிடேனியா.—வாரும்; இப்புஷ்ப சயனத்திலிரும்; உமது இனிய கன்னங்களைத் தடவிக் கொடுப்பேன். பருத்துச்சமமாயிருக்கும் உமது முடியில் கஸ்தூரி ரோஜா மலரைச்சூட்டுவேன். என் இன்பமே, உமது அழகிய நீண்டகாதில் முத்தமிடுவேன்.

பாட்டம்.—பயற்றம்பூ எங்கே?

பயற்றம்பூ.—இதோ இருக்கிறேன்.

பாட்டம்.—பயற்றம்பூவே, என்தலையைச் சற்றுச் சொறியும். சிலம்பிக்கூடர் எங்கே?

சிலம்பிக்கூடு.—இதோ இருக்கிறேன்.

பாட்டம்.—நீர் உமது ஆயுதங்களைக் கைக்கொண்டு எனக்காக நெருஞ்சில்மேலிருக்கும் செங்கால் தேனீயைக் கொன்று தேன் கூட்டைக் கொண்டுவாரும். அது செய்வதில் அதிகக் களைப்புண்டாகும்படி கஷ்டப்பட வேண்டுவதில்லை. தேன் ஒழுகி வழிந்தோடி உம்மை மூழ்க அடிக்காதபடி, தேன்கூட்டை உடையாமற்சாக்கிரதையாய்க் கொண்டுவரல்வேண்டும். கடுகுவிரையார் எங்கே?

கடுகுவிரை.—இதோ இருக்கிறேன்.

பாட்டம்.—கடுகுவிரையாரே, கை கொடும்; எனக்கு இவ்வுபசாரங்கள் ஒன்றும் வேண்டுவதில்லை; விட்டுவிடும்.

கடுகுவிரை.—உம்முடைய விருப்பம் யாது?

பாட்டம்.—*குதிரைவீரச் சிலம்பிக் கூடர் சொறிகிறார்; அவருக்கு உதவியாக நீரும் சற்றுச் சொறியும். எனக்கு நாவிதனிடத்துப் போகவேண்டும்; முகத்தில் நிரம்ப மயிர் வளர்ந்திருக்கிறது. நான் மிக மென்மையான ‡கழுதையாகையால் மயிர் குறுகுறென்னும்பொழுது சொறியல் வேண்டுகிறேன்.

டிடேனியா.—என் இனிய அன்பே, உமக்குக் கானம் கேட்கவேண்டுமோ?

பாட்டம்.—பாட்டைக்கேட்டு இரசிக்கும் காதையுடையேன்; பேரொலியுள்ள வாத்தியம் கேட்க விரும்புகிறேன்.

டிடேனியா.—என் அன்பே, நீர் உண்ண விரும்புவது யாதோ?

பாட்டம்.—†ஒருபடி உலர்ந்த தீனி ஏதேனும் வேண்டும்; உலர்ந்த புற்கட்டுக்கு ஆசையா

---

* சொறியும்படி பயற்றம்பூவுக்குக் கட்டளையிட்டதை மறந்து, சிலம்பிக்கூடுசொறிவதாக பாட்டம் நினைத்துப் பேசுகிறான்.

‡ பாட்டம் தான் கழுதை முகமடைந்ததை உணராமலே தன்னைக் கழுதையென்று இழிவாய்ச் சொல்லிக்கொள்ளுகிறானென்றுபொருள் கொள்ளலாம்.

† இதுவரையில்மனிதருணர்ச்சியோடுபேசிக்கொண்டிருந்தவனுக்குக் கழுதைத் தலையின்சம்பந்தத்தால் கழுதை உணர்ச்சி வந்துவிட்டது.

யிருக்கிறது. அவ்வுலர்ந்த புல்லினது இனிப்பு வேறொன்றுக்கும் வராது; இரண்டொரு கை யளவு காய்ந்த பயறு கிடைக்குமாயின் எனக்கு நிரம்பச் சந்தோஷம். இப்பொழுது எனக்குத் தூக்கம் வருகிறது; உன்பணிப்பெண்கள் என் தூக்கத்தைக் கெடுக்காதிருப்பார்களாக.

டிடேனியா.—நீர் கண்வளரும்; மரத்தைக் கொடி சுற்றிக் கொள்வதுபோல், உம்மை நான் என் புஜங்களால் அணைத்துக்கொள்வேன். உம் மிடத்து எனக்கு ஆசை அதிகரிக்கின்றது; காதல் மீறுகின்றது. (அவர்கள் உறங்குதல்)

[பக் வருதல்]

ஓபரான்.—(மறைவினின்றும் முன் வந்து) 'ராபின்' வரவு நல்வரவாக; இவ்வினிய காட்சியைக் கண்டாயோ? அவள் சீராட்டு எனக்கு மிக்க பரிதாபத்தை உண்டாக்குகின்றது; அவளுக்கு இரங்குகிறேன். சற்றுமுன்பு அவள் புதிய நறுமலர்க்கோவையை அவனது கன்னத்து மயிர்ச் சுழியிற் சுற்றியதையும், மொட்டினுளகப்பட்டு அவைமலர்ந்தபின் பருத்து நன் முத்து மணியைப்போல் உருண்டு தோன்றும் பனித்துளிகள், அம்மலரின் கண்களில் தமக்குண்டாய இச்சிறுமைக்கு வருந்தி அம்மலர்கள் சிந்திய கண்ணீர்போல் நின்றதையும் கண்டேன். அதற்கு அவளை இகழ்ந்து நாணங்கெடுத்தேன். அவள் என்னைப்பொருத்தருள வேண்டிக்கொண்டாள்; மாற்றுனக் கொண்டுவந்த குழந்தையை என்வசம் விடுவென்றேன்; அக்கணமே அவள் தன் கந்தர்விகளைக்கொண்டு அக் குழந்தையைக் கந்தர்வலோகத்தில் என் பூங் காவனம் சேர்ப்பித்தாள். ஆதலின், அவள்கண்ணிலுள்ள இக்கோரமான மயக்கத்தை மாற்றுவேன். நீ இவ்வாதென்ஸ் நகரத்தோன் தலையிலிருந்து அவ்விருபத்தைக் களைந்துவிடு. அவனும் இவற்றைக் கனவிற்பட்ட துன்பமெனவெண்ணி, மற்றவரைப்போல் ஊர்போய்ச் சேருவான். இப்பொழுது முதலில் எனது நாயகியை விடுவிப்பேன். நீ எப்பொழுதும்போல் ஆவாயாக. (மாற்றுமருந்தால் அவள் கண்ணைத் தொடல்) உன் கண்ணுக்கு எப்பொழுதும் இயல்பாயுள்ள பார்வையுண்டாவதாக. மீரன் பூவின் மயக்கத்தை இப்பத்தினிப்பூ மாற்றும் வன்மையுடையது. என் டிடேனியாவே, என் இனிய அரசியே எழுந்திரு.

டிடேனியா.—என் ஓபரானே, என்ன கனவு கண்டேன்! கழுதைமேற் காதல்கொண்டது போற் கண்டேனே!

ஓபரான்.—உன் நேசன் அதோ படுத்திருக்கிறான்.

டிடேனியா.—இவை எவ்வாறுநேர்ந்தன? இப்பொழுது அக்கோர ரூபத்தைக் காணக் கண் வெறுக்கின்றது.

ஓபரான்.—சற்றுப் பொறு. 'ராபின்,' அவன் கழுதைத் தலையை நீக்கிவிடு. டிடேனியா, உன் கந்தர்விகளைக் கானஞ்செய்யச்சொல்; அக்கானத்தால் இங்கு உறங்கும் ஐவரும் இறந்தவர்களிலும் அதிகமாய் அயர்ந்து நித்திரை செய்யக்கடவர்.

டிடேனியா.—கானம்; கந்தர்விகாள், நித்திரையை யுண்டாக்கும் கானம். (நயமாய்க்கானஞ்செய்தல்.)

பக்.—நீ உறக்கமுணர்ந்து உனக்குள்ள பேதைக் கண்ணுற் பார்ப்பாயாக.

ஓபரான்.—வா; என்னரசியே, கைகோத்தாடவா. இவர் நித்திரை செய்யுமிடத்தைத் தொட்டிலென ஆட்டுவோம். நம்முள் பிணக்குத் தீர்ந்து புதிய அன்பு முன்னிலும் அதிகமாய் உண்டாகியதால், நாம் நாளை நடுநிசியில், தீஸியுஸ்ஸின் அரண்மனையில், அவன் மணமனைவியோடு தழைத் தோங்கவேண்டி, நம் நற்கூத்தாடுவோம். அப்பொழுது அங்கு மணம்புரிந்திருக்கும் மற்றைக் காதலரும் தம்முள் பிரியா அன்புண்டாகப்பெற்று எல்லா நன்மையையும் அடைவார்களாக.

பக்.—என்னிறைவ, கேளும்! இதோ, காலைக்குருவி கத்துகின்றது.

ஓபரான்.—என்னரசியே, நாமும் இவ்விரவைத் தொடர்ந்து அது செல்லுமிடத்துக்கு ஆடிச் செல்வோம்; நாம் சந்திரனிலும் வேகமாய்ச் சுழன்று வருவோமல்லவோ?

டிடேனியா.—என்தலைவ, நாம் ஓடும்பொழுது எனக்கு இவ்விரவில் இம்மானிடரிடையிற் கிடந்துறங்கும்படி நேர்ந்தது இன்னவாறென்று

சொல்ல வேண்டுகின்றேன். (போதல். உள்ளில் கொம்பு ஊதல்.)

[தீஸியுஸ், ஹிப்பாலிடா, இஜீயஸ், பரிவாரங்கள் வருதல்.]

தீஸியுஸ்.—உங்களில் ஒருவன் போய்க் காடு காப்போனை அழைத்து வருக. நமது வஸந்த விழாக் கொண்டாடல் கழிந்தது. இனி என் அன்பே, இப்பொழுது அதி காலையாகையால் என் வேட்டைநாயின் கானம் கேட்பாயாக. நாய்கள் தனித்தனியே ஓடியாடித்திரிய அவற்றின் பிணையலைத் தெறித்துவிடு. காடுகாப்போனெங்கே? பார். (ஒரு வேலைக்காரன் போதல்.) என் இனிய அரசியே, நாம் இம்மலையின் உச்சியிற்போய் அங்கிருந்து நாய்களின் குரைப்பும், அக்குரைப்பின் எதிரொலியும் ஒன்றுசேர்ந்த குழப்பத்தைக் கேட்போம்.

ஹிப்பாலிடா.—நான் எத்தனையோ சூரர்கள் கடும்வேட்டை யாடுமிடங்களில் அவருடனிருந்திருக்கிறேன்; எங்கும் இந்த வைபவம் கண்டதில்லை. சோலையில் மாத்திரமோ, ஆகாசத்திலும் ஊற்றங்கரைகளிலும் அருகிலுள்ள எல்லாவிடங்களிலும் ஓசேசத்தமாயிருக்கின்றது. இவ்வளவு இனிய முழக்கமும், இன்னிசைக் குழப்பமும், எங்கும் கேட்டதில்லை.

தீஸியுஸ்.—என் வேட்டைநாய்கள் 'ஸ்பார்டன்' ஜாதியைச்சார்ந்தவை. அவற்றைப்போல் திறந்த வாயையும், செம்மயிரையும், தொங்கும் தலையையும், தரையிற்புரளும் நீண்ட காதையும் வளைந்த முழந்தாளையும், 'தெஸ்ஸலியின்' காளைகள்போல் அலைதாடியையும் உடையன. வேட்டையாடுவதில் விரைவுள்ளனவல்ல; ஆயினும், ஒன்றின்கீழ் ஒன்றாக மணிகளின் நாதம்போல் சங்கீதக் கிரமம் பெற்றுள்ள பலவித ஸ்வரத்தையும் உடையன. *ஸ்பார்டா, 'தெஸ்ஸலி' முதலிய இடங்களிலிருக்கும் வேட்டுவர் இங்ஙனம் இன்னிசையோடு கூடிய நாய்களைக்கொண்டு வேட்டையாடியறியார். அவ்விசையைக் கேட்கும்பொழுது நீயே தெளிவாய்! ஆ! நில்! இங்கிருக்கும் இத்தேவதைகள் யார்?

இஜீயஸ்.—என்னுண்டவனே, இங்கு உறங்குபவள், என் புதல்வி, இங்குப் படுத்திருப்பவன், லைஸாண்டர்; இவன், டெமிட்ரியஸ்; இவள், நேடாரின் புதல்வியாகிய ஹெலெனா. இவர்கள் எல்லோரும் இங்கு ஒருமித்திருப்பது எனக்கு அதிசயமா யிருக்கின்றது.

தீஸியுஸ்.—இவர்கள் வஸந்தவிழாக் கொண்டாடுதற்கு அதிகாலையில் எழுந்தார் போலும்; நாம் விழாக்கொண்டாடவரும் குறிப்பை அறிந்து நம்முடனிருந்து உபசரிக்க இங்கு வந்தாரென்று எண்ணுகிறேன். இஜீயஸ், தன் விருப்பம் இன்னதென்று ஹெர்மியா அறிவிப்பதற்குக் குறிப்பிட்ட நாள் இஃதன்றோ?

இஜீயஸ்.—ஆம், என்னுண்டவனே.

தீஸியுஸ்.—கொம்பை ஊதி அவர்களை எழுப்பும்படி வேட்டைக்காரர்களுக்குக் கட்டளையிடு.

(உள்ளில் கொம்பும், கூச்சலும். லைஸா, டெமி, ஹெர், ஹெல, திடுக்கிட்டெழுதல்.)

நண்பர்களே, ஸுதினம்; *ஸெண்ட் வாலெண்டைன் நாள் சென்றுவிட்டதே. இப்பொழுதுதான் இக்காட்டுப்பட்சிகள் தத்தம் துணைகளைத் தெரிகின்றனவோ?

லைஸாண்டர்.—என்னை மன்னித்தருளவேண்டுகின்றேன்; என்னுண்டவனே.

தீஸியுஸ்.—நீங்கள் எழுந்து நின்று உறக்கமுணருங்கள். நீங்கள் இருவரும் எதிரிகளான பகைஞரல்லீர்? பகையும் பகையும் மனக்கொதிப்பும் பயமுமின்றி இவ்வாறு ஓரிடத்து உறங்கும் இவ்வைக்கியம் இவ்வுலகில் எங்கிருந்து வந்தது?

லைஸாண்டர்.—என்னுண்டவனே, தூக்கக் கலக்கத்தில் தடுமாறிச் சொல்லுகிறேன்; நான் இங்கு இன்னவிதமாய் வந்தேனென்று எனக்கு உண்மையில் தெரியவில்லை; உறுதியாய்ச்சொல்வேன். எனக்கு இப்பொழுது ஞாபகத்துள்ளதை உள்ளவாறுரைப்பேன். நான் ஹெர்மியாவோடு இங்கு வந்தேன். எங்களுடைய கருத்து, ஆதென்ஸ் நகரைவிட்டு வேறிடம்போய்,

* வேட்டைக்குப் பெயர்போன இடங்கள்.

* ஸெண்ட் வாலெண்டைன்நாள்-பிப்ரவரி 14-ம் தேதி. அன்றைத்தினம், வருஷத்துக்கு ஒருமுறை பட்சிகள் தத்தம் துணையைத் தெரிவதாக வியவகாரம். தீஸியுஸ் இவர்களைக் காட்டில் ஒருமித்துக்கண்டதைப்பற்றி இச்சல்லாப வார்த்தை நிகழ்ந்தது.

அங்கு ஆதென்ஸ் நகரச் சட்டத்தின் துன்ப மின்றி.....................

இஜீயஸ்.—போதும்; போதும், என் ஆண்டவனே, நீர் கேட்டதுபோதும். இவனைச்சட்டத்திற்கு உட்படுத்தவேண்டுகின்றேன். அவர்கள் திருட்டுத்தனமாய்ப்போய், என்னையும், டெமிட்ரியஸ், உன்னையும் மோசஞ்செய்ய எத்தனித்தார்கள்.

டெமிட்ரியஸ்.—என்னாண்டவனே, அவர்கள் யாருமறியாமல் இக்காட்டுக்கு ஓடிவந்தார்கள் என்றும், அவர்களுடைய கருத்து இன்னதென்றும் எனக்குச் சீருள்ள ஹெலனா உரைத்தாள். நான் வேகமாய் அவர்களைத்தொடர்ந்து இங்கு வந்தேன்; என்மேலுள்ள காதலால் ஹெலனாவும் என்பின் வந்தாள். ஆனால், நலமிக்க என்னாண்டவனே, என்ன மாயமோ அறியேன்—அது மாயையின் வன்மையே—எனக்குஹெர்ம்யாவின்மேலுள்ள நேசம் பனியைப்போல் உருகியோடிவிட்டது; பிள்ளைப்பிராயத்தில் பயனற்ற பொருளின்மேற்பாராட்டிய நேசம்போல் தோற்றுகிறது. இப்பொழுது எனக்கு எல்லா விசுவாசமும், மனத்தினன்பும், கண்ணினின்பமும் ஹெலனாவே. என்னாண்டவனே, நான் ஹெர்ம்யாவைக் காணுமுன் எனக்கும் ஹெலனாவுக்கும் மணம் நிச்சயமாயிருந்தது. பிணியிற் சுவையுணர்ச்சி கெட்டு உணவை வெறுத்துப் பின்னர் பிணி நீங்கிச் சுவைதோன்ற, அவ்வுணவை ஆவலுடன் வேண்டுவதுபோல், நான் இப்பொழுது ஹெலனாவை வேண்டுகின்றேன்; இனி என்னாசை அவளிடத்தே நீங்காது நிலைபெற்று நிற்கும்.

தீஸியுஸ்.—இனிய காதலர்களே, உங்களை இங்குச் சந்தித்தது நன்றாயிற்று; உங்கள் கதையைப் பின்பு விவரமாய்க் கேட்போம். இஜீயஸ், உன் வேண்டுகோளை நிறைவேற்றேன்; அதற்கு விரோதமாய் உத்தரவுசெய்வேன். சீக்கிரத்தில் எமது கலியாணத்தோடு இவருடைய இரண்டு கலியாணங்களையும் நமது தேவாலயத்தில் நடத்துவதாய் நிச்சயித்திருக்கிறேன். காலைப்பொழுது கழிந்ததால் நாம் கருதிய வேட்டையை நிறுத்துவோம். எம்மோடு நீங்களும் ஆதென்ஸுக்குத் திரும்பிவாருங்கள். நாம் மூவரும் நம் காதலிகளோடு மணவிழாக் கொண்டாடுவோம். ஹிப்பாலிடா, நாம் போவோம் வா.

(தீஸியுஸ், ஹிப்பாலிடா, இஜீயஸ், பரிவாரங்கள் போதல்.)

டெமிட்ரியஸ்.—வெகு தூரத்துள்ள மலைகள் மேகமென மாறித் தோன்றுவனபோல், எனக்கு இரவில் நேர்ந்தனவெல்லாம் சிறுத்து விவரமின்றிக் குழம்பிக் கலந்து காணப்படுகின்றன.

ஹெர்ம்யா.—மாறுகண் பார்வைபோல் ஒவ்வொரு பொருளும் எனக்கு இரட்டை இரட்டையாய்த் தோற்றுகின்றது.

ஹெலனா.—எனக்கும் அப்படியே. ஒரு இரத்தினத்தைக் கண்டெடுத்ததுபோல் டெமிட்ரியஸ்ஸைப் பெற்றிருக்கிறேன்; இப்பொழுது என்னுடைமையே; என்னுடைமை யென்ற நிச்சயமுமில்லை.

டெமிட்ரியஸ்.—நாம் உறக்கமுணர்ந்திருக்கிறோமென்பது உனக்கு நிச்சயந்தானா? இன்னும் உறங்கிக்கொண்டு கனவு காண்கிறோமென்று எனக்குத் தோற்றுகிறது. இராஜா இங்கு வந்து நம்மைத் தமக்குப்பின் வரும்படி கட்டளை யிட்டாரென்று உனக்குத் தோன்றுகிறதோ?

ஹெர்ம்யா.—ஆம், இராஜா வந்திருந்தார்; என் தந்தையும் வந்திருந்தார்.

ஹெலனா.—ஹிப்பாலிடாவும் வந்திருந்தாள்.

லைஸாண்டர்.—அவர் நம்மை ஆலயத்துக்கு வரும்படிக் கட்டளையிட்டுப் போனார்.

டெமிட்ரியஸ்.—அப்படியானால்நமக்கு விழிப்பேதான்.நாம்அவரைத்தொடர்ந்துபோவோம். போகும் வழியிற் கனவைச் சொல்லிக் கொள்வோம்.(டெமி, லைஸா, ஹெர்ம், ஹெல, போதல்.)

பாட்டம்.—(கண்விழித்து) என் இறுதிச்சொற்குறிப்பு வந்தவுடன் என்னைக் கூப்பிடு; வருகிறேன். நான் மேற்சொல்ல வேண்டியது 'மிகவும் அழகுள்ள பிரமஸ்ஸே' என்றோ? ஓ! க்வின்ஸ்! துருத்திதிருத்தும் ப்ளூட்! செம்புகொட்டி ஸ்நௌட்! ஸ்டார்வெலிங்! என்னைத் தூக்கத்தில் விட்டு ஓசைப்படாமற் சென்றார்களோ! நான் வெகு அதிசயமான ஓர் கனவுகண்டேன்; அஃது ஒருவர் புத்திக்கும் எட்டாத

கனவு! இக்கனவை வெளியில் விவரித்துச்சொல்லத் தொடங்குபவன் கழுதையேயாம். எனக்குத் தோற்றுகிறது, நானொரு—அஃது ஒருவனாலும் சொல்லமுடியாது. நான்நினைக்கிறேன், எனக்கொரு—எனக்கு இன்னது சேர்ந்ததென்று சொல்லத்துணிபவன்பரம மூடன்; சந்தேகமில்லை. நான் கண்டகனவு மனிதன் கண்ணாற் கேளாதது; காதாற் பாராதது; கையால் உருசிக்காதது; நாவால் ஊகியாயது; மனத்தாற் சொல்லாதது. இக்கனவைப் பற்றி ஒரு பாடற் செய்ய க்வின்ஸ்ஸினிடத்தில் ஏற்பாடு செய்வேன். அதற்குப் 'பாட்டத்தின் கனவு' என்று பெயர் வழங்குக. அப்பாடலை அரசன் முன் கூத்தின் முடிவில் நானே பாடுவேன். ஒருவேளை அவள் (திஸ்பி) இறக்கையிற் பாடுவது அதிக உசிதமாயிருக்கு மென்று எண்ணுகிறேன்'

(போதல்.)

2-ம் இடம். ஆதென்ஸ் நகரம், க்வின்ஸ்ஸினது வீடு.

[க்வின்ஸ், ப்ளூட், ஸ்நௌட்; ஸ்டார்வெலிங் வருதல்]

க்வின்ஸ்.—பாட்டத்தின் வீட்டுக்கு ஆளனுப்பினீர்களோ? அவன் வீடுவந்துசேர்ந்தானோ?

ஸ்டார்வெலிங்.—அவனைப்பற்றி ஒன்றுந் தெரியவில்லை. சந்தேகமில்லை, அவன் மாறிவிட்டானென்றே எண்ணுகிறேன்.

ப்ளூட்.—அவன் வராவிட்டாற் கூத்துக்கெட்டுப்போம்; சரியாய் நிறைவேறாது; நிறைவேறுமோ?

க்வின்ஸ்.—சாத்தியமில்லை. இவ்வாதென்ஸ் நகரத்தில் அவனைப்போற் பிரமஸ்வேஷம் போடத்தக்கவன் ஒருவனுமில்லை.

ப்ளூட்.—உண்மையில் இல்லை. இவ்வாதென்ஸ் நகரத்தில் கைத்தொழிலாளிகளுள் நல்லவிவேகமுள்ளவன் அவனே.

க்வின்ஸ்.—ஆம், பார்வைக்கும் உருவத்திற் சிறந்தவன்; உத்தமமான இனிய குரலையுடையவன்.

[ஸ்நக் வருதல்.]

ஸ்நக்.—ஆலயத்திலிருந்து கலியாணக்கோலத்தோடு நமது அரசன் வருகிறார். அவருடன் வேறு இரண்டு குலமக்களும் தம் மனைவிமார்களோடு விவாகஞ் செய்துகொண்டு வருகிறார்கள். இப்பொழுது நம் கூத்து நடக்குமாயின் நமக்கு நல்ல வருவாய்க்கு வழியுண்டாம்.

ப்ளூட்.—ஓ! வாயாடிப்பாட்டம்! ஒரு நாளைக்கு இரண்டு பணம் விழுக்காடு உயிருள்ளவளவும் கிடைக்கக்கூடிய உபகாரச்சம்பளத்தை இழந்து விட்டானே. அவன் பிரமஸ் வேஷம் போட்டு ஆடுந்திறமைக்கு அரசன் நாளொன்றுக்கு இரண்டு பணம் விழுக்காடு சம்பளம்கொடாமலிரார். அப்படிக்கொடாராயின் நீங்கள் என்னைக் சொல்வது எனக்குச் சம்மதம்.

[பாட்டம் வருதல்.]

பாட்டம்.—இச்சிறுவர்களே?

க்வின்ஸ்.—ஓ! பாட்டம்! ஆ! என்ன காலம்!

பாட்டம்.—நான் சொல்லக்கூடிய அதிசயம் நிரம்பவுண்டு. என்னவவன்று என்னைக் கேட்கவேண்டுவதில்லை; சொல்வேனானால்,நான் ஆதென்ஸ் நகரத்தே னல்லன், ஒவ்வொன்றையும் உங்களுக்கு நடந்தபடி நானே சொல்வேன்.

க்வின்ஸ்.—இனிய பாட்டமே சொல்; கேட்போம்.

பாட்டம்.—ஒரு வார்த்தைகூடச்சொல்லேன் உங்களுக்கு இப்பொழுது நான் இவ்வளவுதான் சொல்வேன்: அரசன் அமுது செய்தாயிற்று; உங்கள் உடைகளைச் சித்தப்படுத்திக்கொள்ளுங்கள்; *தாடியை நல்ல கயிற்றாற் கட்டிக்கொள்ளுங்கள்; உங்கள் தோற்செருப்புக்குப் புதிய நாடாவேண்டும். விரைவில் அரண்மனை வந்து சேருங்கள். ஒவ்வொருவரும் தாம் செய்யவேண்டியவற்றைச் செவ்வையாய் ஞாபகப்படுத்திக்கொண்டு வரவேண்டும். வளர்க்காமல் முடிவான செய்தியைச் சொல்லிவிடுகிறேன். நமது கூத்து அரசனது அங்கீகாரத்துக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. எவ்வாறானாலும் திஸ்பிக்குச் செவ்வையான சணல் நூற்புடவை வேண்டும். சிங்கவேஷம் போடுபவன் தன் நகம் களையக்கூடாது. ஒவ்வொருவரும் ஈர உள்ளியோ, வெள்ளுள்ளியோ தின்று வரவும் கூடாது; நாம் விடும் சுவாசம் நன்மணமுள்ளதாயிருக்கவேண்டும், நமது கூத்தை இனிய கூத்தென்று ஒப்புக்கொள்வார்களென்பதிற் சந்தேகமேயில்லை. இனி அதிக வார்த்தை வேண்டுவதில்லை, ஓடுங்கள், சீக்கிரப்படுத்துங்கள். (யாவரும் போதல்)

நான்காம் அங்கம் முற்றிற்று.

எஸ். நாராயணசாமி அய்யர், பி. எ.

* அப்படிச் செய்யாவிடில், அரசன் முன்பு ஆடும்பொழுது பொய்த்தாடி சமயத்தில் நழுவி விடும்.

## ஹிந்துக்களின் க்ஷயகதி.

—

௩-வது உன்மானக்ஷயம்;
௪-வது மானக்ஷயம்.

உன்மானம் என்பது உயரம். மானம் என்பது கனம். ஹிந்துக்கள் வரவர உயரமும் கனமும் குறைந்து வருகிறார்களென்பதில் சந்தேகமில்லை. உன்மானக்ஷயமும் கனக்ஷயமும் உண்டாவது பெரும்பாலும் ஓரேகாரணம் பற்றியாகையால் இரண்டையும் ஒருமித்து எழுதலானேன்.

மேற்கண்ட இருவகை க்ஷயகதிகட்குக் காரணம் முக்கியமாய் வறுமைதான். அதிகப்பட்டால் நாலைந்து பைசாகொண்டு ஒரு நாள் முழுமையும் ஒருவன் நமது தேசத்தில் காலம்தள்ள வேண்டியிருக்கிறதென்று முதலாவது பத்திரிகையில்பிரஸ்தாபித்திருக்கிறேன். இவ்வளவு அற்பமுதல் கொண்டு காலக்ஷேபம் நடத்திவரும் ஸ்திரீபுமான்கள் சேர்வதால் வீரியம் ஊர்ஜிதத்தோடு பாயாமல் வெகு பலக்ஷயமாய்ப் பாயும். ஊர்ஜிதத்தோடு எறியப்பட்ட கல் உயர எழும்புவதுபோல பலஹீனமாய் எறியப்பட்ட கல் உயர எழும்பாது. அதுபோல பலஹீனமாய் விழப்பட்ட வீரியத்தால் சந்ததி தகுந்த வளர்ச்சிக்கும் புஷ்டிக்கும் இடமில்லாமல் உயரமும் கனமும் குறைந்து உண்டாகிறது. சாதாரணமாய் தகுந்த உயரமும் கனமும் பொருந்திய ஜனங்களுக்கும் சிலசமயங்களில் உயரமும் கனமும் குறைந்த சந்ததிகள் உண்டாகக்கூடும். இதற்குக்காரணம் கலவைசமயம் அவர்கள் பலஹீனமாகவும் ஊர்ஜிதமின்றியும் இருந்து திடச்சித்த மில்லாமலோ நிற்பந்தத்தின் மேலோ அலுப்புக்காற்றாமல் பிரவர்த்திப்பதுதான்.

மாதா பிதாவழி சந்ததி உண்டாகுமென்று முன் பத்திரிகைகளில் எடுத்துக்காட்டி இருக்கிறோம். மாதாபிதாக்கள் தகுந்த உயரமும் கனமுமாய் இருந்தாலும் பாரம்பரியம் என்ற விதிப்படி அவர்கட்கு உயரமும் கனமும் பொருந்திய சந்ததிகள் உண்டாகாமல் உயரமும் கனமும் குறைந்த சந்ததிகள் உண்டாவதற்கு முன் எடுத்துக்காட்டிய காரணத்தைத் தவிர வேறொரு காரணமும் உண்டு. தற்காலத்தில் ஒருவன் ஆகிருதியோடிருந்தால் அவன் அகலமும் நீளமுமாய் மிருகப்பிராயமாய் இருக்கிறானென்று சில ஸ்திரீகள் பழிக்கிறார்கள். முற்காலத்தில் ஆறடி உயரமிருப்பது சாதாரணம்; அதற்கதிகமான உயரமும் ஆகிருதியுமான மனுஷர்களு மிருந்தார்கள். அப்பேர்ப்பட்டவர்களை நான் தற்காலத்திலும் அபூர்வமாய்க் கண்டிருக்கிறேன். அப்பேர்ப்பட்ட ஆகிருதி உள்ளவர்களை இப்பொழுது சில ஸ்திரீகள் நமனுக்கும் பூதத்துக்கும் இராக்ஷதனுக்கும் ஒப்பிட்டு அழகல்லவென்று தள்ளுகிறார்கள். அதற்கு விபரீதமாக உடல் சிறுத்தும் ஒல்லிப்பட்டும் கனம் குறைந்தும் உயரம் குறைந்தும் இருந்தால் அப்படிக்குள்ள புருஷன் எவ்வளவு வயதாயும் சிறுபிள்ளைபோலவும் கொட்டைப்பாக்குப் போலவும் இருக்கிறானென்று புகழ்ந்து அவனை அழகென்றும் மதிக்கிறார்கள். அதிலும் ஆபரணம் அணிந்திருந்தால் அவன்மேல் நாட்டம் அதிகம். ஒரு ஸ்திரீயானவள் எவன்மேல் ஆசைகொண்டு கலவை சமயம் எவனை நினைக்கிறாளோ அவன் மாதிரி சிசு உற்பத்தி யாகுமென்பது சாஸ்திர சித்தாந்தம். வராஹசம்ஹிதை இரண்டாம்பாகம் ௨௮-வது அத்தியாயம் முதலாவது சுலோகம் காண்க. அதுபோலவே 'ஸ்கோபன்ஹார்' முதலிய ஜர்மனி சாஸ்திரிகள் சொல்லியிருக்கிறார்கள். 'ட்ரால்' முதலிய அமெரிக்கா சாஸ்திரிகளும் அதை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். ஸ்திரீகட்கு ஆகிருதி குறைந்த புருஷனிடம் நாட்டஞ் செல்லும்போது அவன்போல் சந்ததிஉண்டாகும் என்பதற்குச்சந்தேகமில்லை.

தத்தம் பெண்குழந்தைகட்கு வரன் நிச்சயிப்பது பெரும்பாலும் ஸ்திரீகட்கு இணங்கியபடிதான். ஆகிருதி குறைந்த புருஷனிடம் நாட்டஞ் செல்லும்பட்சத்தில் அவர்களையே வரனாக நிச்சயப் படுத்தும்படியான சித்தவிர்த்தி அதிகரிக்கிறது. ஆகிருதிகுறைந்த ஜோடி அதிகரிக்கும்போது சந்ததியும் ஆகிருதி குறைந்தே ஜனிக்கிறது. ஆண் பெண் என்ற இணை உண்டாவதில் நாம் எல்லோரும் திருஷ்டிவைக்கவேண்டியதற்குக் காரணம் அவர்கள் மட்டில் தனிமையாக உண்டாகும் லாபம் நஷ்டம், இன்பம் துன்பம்; இவைகள் மாத்திரம் பெரிதாக

னைத்தன்று; அவ்வினை மூலம் உண்டாகும் சந்ததி இன்னதென்று நிச்சயப்படுகிற படியால் அதுபூலோகமுழுவதும் சம்பந்தித்தசங்கதியாக இருத்தல் நிமித்தம் தான். இக்காரணத்தால் ஆண் பெண் என்ற இணை உண்டாவதில் நாம் திருஷ்டி வைக்கவேண்டுமென்று 'ஸ்கோபன் ஹார்' என்பவர் எழுதியிருக்கிறார். இதுதான் மனுதர்மசாஸ்திரம். ஆகிருதிகுறைந்த ஜோடிப் புணர்ச்சியால் ஆகிருதி கூடிய சந்ததி உண்டாகாது. 'வினை (விதை) யொன்றுபோடச் சுரை யொன்று முளைக்குமா?' என்றும் 'எள்விவிதைக் கக் கொள்முளைக்குமா?' என்றும் தொன்றுதொட்டு வரும் பழமொழிகள் மேற்சொல்லிய சித்தாந்தத்தையே அனுசரித்திருக்கின்றன.

ஸ்திரீகட்குள் வரன் தெரிந்தெடுப்பதற்குள்ள பிரமாணவாக்கியம் ஆண்நெட்டை பெண் குட்டை யென்பதுதான். பெண்ணைப்பார்க்கிலும் ஆண் நெட்டையாய் மாத்திரம் இருந்தால் போதாது. உயரம் புருஷாகிருதிக்குத் தகுந்த உயரமாகவும், அதற்குத் தகுந்த புஷ்டியாகவும் இருக்கவேண்டும். பெண் நெட்டையாக இருந்தால் அதைப்பழிக்கும்படி இடங்கொடுக்க லாகாது. வெள்ளைக்காரர்கட்குள் பெண் நெட்டையாயிருப்பது விசேஷம். அவர்கட்குள் பெண் நெட்டையாயிருப்பது ஓர்வித அழகென்று மதிக்கிறார்கள். அப்பேர்ப்பட்ட சித்தவிர்த்தியும் அபிமானமும் இருப்பதால் வெள்ளைக் காரர்களுக்குள் உன்மான க்ஷயம் அதிகமாக நேரிடுகிறதில்லை. நமக்குள் பெண் நெட்டையாகக் கண்டால் அவர்களைத் தகுந்த ஜோடி சேர்த்து விவாகம் செய்வது நலம்.

ஊர்ஜிதமான வீரியமூலம் ஜனிக்கும் சந்ததிகட்கு தகுந்த போஷணை கிடைத்தா லல்லாமல் தகுந்த உயரமும் கனமும் கிடையாது. வித்து எவ்வளவு புஷ்டியாக இருந்தாலும் நிலவளமும் ஜலவளமுமில்லாமல் போகும்போது அவ்வித்திலிருந்து உற்பத்தியாகும் செடிகொடி விருக்ஷம் எப்படி கரண்டு உன்னதமும் ஆகிருதியும் இல்லாமற் போகிறதோ அப்படியே ஊர்ஜித வீரியமூலம் ஜனித்த சந்ததியும் ஆகாரக்குறைவால் தகுந்த புஷ்டியும் உன்மானமும் அடையாமல் கரண்டு போகக்கூடும்.

ஊர்ஜித வீரியமூலமல்லாமல் ஜனித்த சந்ததிகட்கு ஆகாரபுஷ்டி எவ்வளவு இருந்தாலும் அது அவ்வளவு பயன்படுகிறதில்லை. இதற்குக் காரணம் துர்ப்பலமாய் ஜனித்திருப்பதால் தகுந்த உயரத்துக்கும் கனத்துக்கும் வேண்டிய ஆகாரம் ஜீரணப்பட்டு தேகத்தோடுலயப்பட்டு மென்மேலும் விருத்தி அடைவதற்கு இடமில்லாமற் போவதுதான்.

ஊர்ஜித வீரியமூலம் ஜன்மமும், தகுந்த போஷணையும் இருந்தால் தகுந்த உன்மானமும் கனமும் உண்டாகக்கூடும். பெருமுதல் கொண்டு வியாபாரம் செய்பவனுக்கு கிடைக்கும் இலாபம்போல் சிறுமுதல்கொண்டு வியாபாரம் செய்பவனுக்குக் கிடைக்காது. அதுபோல ஊர்ஜித வீரியத்தால் ஜனித்த ஒருவன் ஆகாரப் புஷ்டியா யருந்தி ஜீரணத்திற்குக் கொண்டுவந்து உயரமும் புஷ்டியும் அடையும்வண்ணம், பலஹீனமான வீரியமூலம் ஜனித்தவர்க்கு உயரமுங் கனமும் அடைவதற்கு இடமில்லை.

ஊர்ஜித வீரிய ஜன்மமும் ஆகாரபுஷ்டியும் உள்ளவர்கட்கும் உன்மானக்ஷயமும் கனக்ஷயமுமுண்டாகக் கூடும். அது பால்யகாலத்தில் அவிவேகமாய் மாதாபிதாக்கள் நடத்திவந்த முறைகேடால் தேகத்தில் வியாதி உண்டாகிறதினாலும், புருஷப்பிராப்திவருமுன்னமே விவாகம் நேரிட்டுப் பிஞ்சைக் கசக்கியமாதிரி சத்தகன்று துர்ப்பல முண்டாகிறதினாலும், வித்தியாப்பியாசம் முதலிய முயற்சியில் மட்டுக்கு மிஞ்சி பிரவிருத்தித்து ஜீரணசக்தி குறைந்து போவதாலும், நாளுக்குநாள் உழைப்பு நிமித்தம் உண்டாகும் சக்தி நஷ்டத்திற்குத் தகுந்தபடி ஆகாரமருந்தாமல் அந்தஸ்திற்காவும் பெருமைக்காகவும் ஆகாரம் குறைந்தருந்தலாலுந் தான்.

இளவித்திட்டால் தகுந்த வளர்ச்சியின்றிப் போமென்பது யாவர்க்கும் தெரிந்தவிஷயம். அதுபோல பால்யவிவாகத்தால் வித்துக்குவைரமில்லாமல் சந்ததி பலஹீனமாயும் உன்மான க்ஷயமாயும் ஆகிருதிக்ஷயமாயும் ஜனிக்கிறது. தற்காலமுள்ள குடும்பங்களில் பிதாவைப்பார்க்கிலும் புத்திரனும் புத்திரனைப்பார்க்கிலும் பௌத்திரனும் படிப்படி க்ஷயப்பட்டிருப்பதை

காணலாம். இதற்குக் காரணம் பாலியவிவாகமும் ஆகாரக்குறைவுமே.

இத்தேசத்தில் ஆகாரக்குறைவுநிமித்தம் ஆடுமாடுகள் குருகிக் கரண்டு க்ஷயப்பட்டிருக்கின்றன. ஒரேமாட்டா லுத்பத்தியானதாக இருந்தாலும் ஆகாரக்குறைவில் வாட்டமுள்ள கன்று உயரமும் கனமும் குறைந்தும், போஷணை புஷ்டியுள்ள கன்று உயரமும் கனமும் கூடியும் இருக்கிறதை எல்லோரும் காணலாம். மேலும் முற்காலத்தில் அதாவது கிராமங்களில் ஆலயங்கட்கு சூலமிட்டு விடப்பட்ட காளைகள் தட்டின்றி கண்டவிடம் மேய்ந்து கட்டுப்படாமல் ஆகிருதியும் திமிலுமாய் மதோன்மத்தத்தோடு பசுக்கூட்டங்களில் பிரவேசித்து சினைப்படுத்தி வந்தபடியால் கன்றுகளும் க்ஷயகதியில்லாமல் வளர்ந்துவந்தன. தற்காலத்தில் அவ்வகைக் காளைகள் கிடையா. அங்கிலேய இராச்சியத்தில் வளர்ப்பதுபோல் பொலியெருது வளர்க்கிறதுமில்லை. கண்டகண்ட நோஞ்சலான காளைகள் பிரவேசிப்பதால் கன்றுகளும் ஆட்டுக்குட்டிகள்போல ஜனிக்கின்றன.

குழந்தைப்பருவத்தில் தகுந்தபாலூட்டமில்லாவிட்டால் ஜனனம் எவ்வளவு புஷ்டியாயிருந்தாலும் குழந்தை தகுந்த வளர்ச்சிபடைகிறதில்லை. தற்காலத்தில் அனேகம் பெண்கட்கு பால் சுரப்பின்றி பசுவின் பாலையும் கூழையும் புகட்டி குழந்தையின் ஜீரணசக்திக்கு அதிகப்பட்டோ, அல்லது புஷ்டிகுறைந்து அளவு அதிகப்பட்டோ குடல்பெருத்து சூனும்வயிறு தட்டிரோக பீடிதமாகி க்ஷயப்பட்டுப் போகிறது. குழந்தைகட்கு தத்தம் மாதாஸ்தன்னியபானம்விசேஷமேயன்றி இதர ஆகாரங்கள் அதிகப்பயனைத் தரத்தக்கதல்ல.

ஆபரண ஆசையாலும் முதல் மிச்சம் பிடிக்க வேண்டுமென்ற பேராவலாலும் சில லுப்தர்கள். ஆபரணமும் பகட்டாடையும் நாகரீகமாகவும் பெருமையாகவும் நினைத்து, அவைகளை யணியும் பொருட்டு வயிற்றுக்கு மூன்று வேளை பூரணமாய் ஆகாரம் அருந்தாமல், புஷ்டியும் பலமும் தெளிவும் கொடுக்கக்கூடிய நெய்பால் பண்டங்களின்றி காலம் தள்ளுவதாலும் மேற்கூறிய க்ஷயகதிகள் உண்டாகின்றன. ஆரம்பத்தில் கிடைக்கிற புஷ்டிக்குத்தகுந்தபடி பிற்காலத்தில் காயம் ரோகமின்றி சக்தியோடுகூட நெடுங்காலம் வாழ்ந்திருப்பதற்கு ஆதாரம். அப்படியிருந்தும் அவர்கட்குத் தங்கக்காப்பும் வயிரக்கடுக்கனும், தோடும் ஜிமிக்கியும், அட்டிகையும் அரைஞாணும், தோடாவும், கொலுசும், ஒத்தும் சங்கிலியும் மோதிரங்களும் குண்டுகளும் இட்டு பட்டாடை யுடுத்திவிட்டால் எல்லாம் வந்ததுபோலெண்ணி, ஆயிரங்காலத்துப் பயிராகும் குழந்தைகளின் க்ஷேமத்தைக்கவனியாமல் அவர்கட்கு தகுந்த ஆகாரம் அளிக்காமல் நடத்திவரும் அவிவேகத்தால் அக்குழந்தைகட்கு வியாதி வரும்படி விதை ஊன்றி அற்பாயுசுக்கு அஸ்திவாரம் போட்டு நாளுக்குநாள் க்ஷயப்பட்டுப் போகும்படி செய்கிறார்கள். பாலிய காலத்தில் வளர்ச்சி உண்டாவது போல் பிற் காலத்தில் வளர்ச்சி உண்டாகிறதில்லை. மரங்களின் வளர்ச்சியைக் கவனித்துப்பார்க்குமிடத்தில் இது விளங்கும். இதற்குக் காரணம் பாலியகாலத்தில் பிரவிர்த்தி குறைந்து நஷ்டம் பட்டுப்பட்டிருப்பதால் தக்ககாலத்தில் புஷ்டியாய் கிடைக்கும் ஆகாரங் கொண்டு நஷ்டத்துக்கு ஈடுசெலுத்துவது மல்லாமல் வளர்ச்சிக்கு வேண்டிய சேஷிப்பும் அதாவது லாபமும் ஏற்படுகிறது. ஆனால் புருஷப் பிராப்தியான பிற்பாடுநஷ்டம் அதிகமாகவும் ஆகாரநிமித்தம் கிடைக்கும் லாபம் அதற் கதிகப்படாமலும் இருத்தலால் வளர்ச்சிக்குக் காரணம் ஏற்படுவதில்லை.

விருதாதிகளாலும் தபசின் முறையறியாமல் தப்பான அபிப்பிராயத்தின்மேல் பசி பட்டினியாய்க்கிடந்து வைராக்கியம் சாதித்து தேகத்தை சுஷ்கப்படுத்திக் கொள்வதாலும் மேற்கண்ட க்ஷயகதிகள் ஏற்படக்கூடும்.

(இன்னும் வரும்,)

எஸ். இராமஸ்வாமி அய்யர், பி. ஏ., பி. ல்.

---

## பொன்விளை நல்லூர்.

(திரவ்ய சாஸ்திர சம்பந்தமானது.)

### 1-ம். அதிகாரம்.

பணமறியாப்பாமரர்.

நீலகிரியின்மேல், ரூபாய்க்குச்சில்லறை கொடுத்து அதனால்வரும் வட்டத்தைக் கொண்டு உபாய் ஜீவனம்செய்து வந்த நாராயண முதலி யென்று ஒருவன் இருந்தான். அந்தமலையில் காப்பித் தோட்டம் மூத

வியன இருப்பதால் வியாபாரம் வெகு அதிகம். ஆகவே, அந்த வியாபாரியின் சிறிய மேஜையின்மேல் வைத்திருக்கும் சில்லரை கோபுரங்கள் ஒன்றொன்றாய் விரைவில் மறைய, அவன்மடியிலுள்ள பை கலகல வென்று ஓயாமல் ரூபாய் ஓசை கேட்டுக் கொண்டே யிருக்கும். தினம் ஒன்றுக்குக்காலை 7-மணி முதல் இரவு 10-மணி வரையில் அவனிடத்தில்குறைந்தது நூறுரூபாய் சில்லரைகள் முழுரூபாய்களாகமாறும். 'பலதுளிபெருவெள்ளம்' என்ற பழமொழியை அவனைப்போல் அநுசரித்து வந்தவர்கள் இல்லை. இப்படி இருக்கும் நாட்களில் ஒருநாள் அவன் தன் சில்லரை மூட்டையைத் தலையில் சுமந்து கொண்டு கடைக்குப்போகும் வழியில், அவன் கண் முன்னர் ஓர்பெரிய அவதூத சித்த புருஷர் தென்பட்டார். உடனே அவன் தன் மூட்டையைக் கீழேவைத்துவிட்டு, அம்மகாபுருஷரைச்சாஷ்டாங்கமாய்த் தெண்டனிட்டான். அப்பெரியவர் வயிறு வரை வளர்ந்த தன் தாடியைத் தடவிக்கொண்டு, 'ஆஹா, நாராயணா! பணஆசை பிடித்த பயல்' என்றார். அவன் சுவாமிகள் திடீரென மறைந்தாலு மறைந்து விடுவாரென எண்ணி அவசரமாய், 'சுவாமீ வயிறுகொடியது, ஓர் நல்ல மாதை மணம்புரிந்து இவ்வுலக வின்பங்களை நுகர இச்சையுள்ளேன். தேவரீர் அநுக்கிரகம் யாதோ' என்று சொல்லிக்கொண்டு மறுபடியும் அவருடைய பாதங்களை வந்தனம் செய்தான். அப்பெரியவர் உடனே 'அந்தப்பையை எடு' என்று ஆஞ்ஞாபித்து அவன்பின் செல்லா தான் முன்சென்றார். அவ்வாறு சிறிது தூரம் சென்றவுடன் சுவாமிகள் ஏதோஒன்றைத்திடீரென்று நினைத்தவர்போல், 'நாராயணா' என்றார். உடனே அவன் 'சுவாமி!' என்ன, அவர் 'இப் புதையல்விளக்கி' என்ற கண்ணாடியையும் உன் பணப்பையையும் பத்திரம்செய்துகொள்' என்று ஓர் வட்டமான கண்ணாடியொன்றை அவனுக்குக் கொடுத்தார். முன்போல் மறுபடியும் மௌனமாய் ஒருவருடன் ஒருவர் சிறிது தூரம் சென்றார்கள். ஓர் பெரிய மலைக்குகை யொன்று எதிர்ப்பட்டது. உடனே அப்பெரியவர் 'நாராயணா! உனக்குப்பசி அதிகமா யிருக்கிறபடியால் அதோ உள்ள அந்தப்பச்சிலையைப் பிடுங்கித்தின்னு' என்று ஆஞ்ஞாபிக்க, நாராயணனும் அப்படியே செய்தான். அப்புறம் யாது நிகழ்ந்ததோ தெரியவில்லை. மறுபடி நாராயணனுக்குத் தன்னறிவு வந்தபொழுது * அவன் ஒரு பெரிய அடர்ந்த காட்டின் மத்தியில் தான் இருப்பதாய்க்கண்டான். அவன் பணப்பையும் சுவாமிகள் கொடுத்த கண்ணாடியும் அவனிடம் இருந்தன. அவன் உடுப்புகள் கரைபட்டிருந்ததால் அவன் நெடுந்தூரம் நடந்தவன்போல் காணப்பட்டான். ஆனால் அவன் காலடிகள் ஒன்றும் புலப்படவில்லை. அவன் அந்தக் காட்டிற்குள் வந்த வழியை அறியக்கூடாமல், இவை யாவும் கனாவோ, சுவாமிகளுடைய திருவிளையாடலோ என்று அவன் பிரமித்து நாலாபக்கமும் சுற்றிப் பார்க்கையில் கரியநிறமுள்ள ஒருவன் அவனைநோக்கி, 'அகப்பட்டாய், கொல்லுவேன், வெட்டுவேன்' என்று கத்திக்கொண்டு ஓடிவருவதை நாராயணன்கண்டு பைத்தியம் பிடித்தவன்போல் ஒன்றும் யோசிக்கக்கூட அவகாசமில்லாமல் உயிர் தப்பினால் போதுமென்று ஓட்டம் பிடித்தான். நாராயணனுடைய பயம் இவ்வளவு அவ்வளவு என்று சொல்ல முடியாது. அவனைத் துரத்தினவனைத் திரும்பிப்பார்த்த பொழுது 'இவன் யாதொரு விரோதமுமில்லாமல் என்னைத் துரத்துகிறான் இவனுடைய உரோமத்தையும், நிறத்தையும், தோலுடையையும்பார்க்கும்போது இவன் நான் கேள்விப்பட்டிருக்கும் நரமாம்சபட்சிணிகளில் ஒருவன் என்பதற்குச்சந்தேகமில்லை; என்னைக்கொன்று தின்னவே இவன் என்னைத் துரத்துகிறான். ஆயினும் சுவாமி யிருக்கிறார்.' என்று நாராயணன் தனக்குள் எண்ணிக்கொண்டு முன்னிலும் அதிவேகமாய் ஓடத்தொடங்கினான்: தன் வேகத்தை அதிகரிக்கவே அந்தக் காட்டுமனிதனும் அதிசீக்கிரமாய்ப் பின் தொடர்ந்தான். அந்த மூர்க்கன் நாராயணனிலும் அதிக பலசாலியா யிருந்ததால் வரவர அவனுக்கு அதிக சமீபத்தில் நெருங்கி அவனை எட்டிப் பிடிக்க எத்தனித்தான். உடனே ஓர் பெரிய ஆண் சிங்கம் கர்ச்சித்ததுபோல் 'ஹாய் ஹாய்' என்ற வெகு பயங்கரமான ஒருசத்தம் உண்டாயிற்று. இருவரும் பதைபதைத்து நின்றார்கள். அப்பொழுது ஓர் இராட்சதனைப்போல் கோர வடிவமுள்ள ஒருவன் அவர்களை நோக்கி ஓடிவந்து நாராயணனை ஓர் கையிலும் அவன் விரோதியை மற்றோர் கையிலும் இறுகப்பிடித்து இழுத்துக்கொண்டுபோய் ஓர் கூரை வேய்ந்த சிறு குடிசையில் அடைத்து விட்டு, 'சாளி, சாளி' யென்று சந்தோஷத்துடன் வெறிபிடித்தவன் போல் உறக்கக்கூவினான். இவன் குரலைக் கேட்டு யௌவன பருவமுள்ள ஓர் பெண் ஓடி வந்தாள். அவள்கறுப்பாய் இருந்தபோதிலும் பார்வைக்கு இலட்சணமாயிருந்தாள். அவளுடைய அகன்ற நெற்றியையும் அழகான சுழிவிழுந்த கன்னங்களையும் மிருதுவான நோக்கத்தையுடைய கரிய விசாலமான கண்களையும் பார்க்கும் ஒருவன் அவள் அதிக புத்திசாலியாயிருக்கவேண்டும் என்று சந்தேக மில்லாமல் நினைப்பான். அவள் கைகள் 'ஆஜானுபாகு' என்றபடி முழந்தாள் வரையில் நீண்டு அழகான அமைப்பு வாய்ந்திருந்தன. அவளுக்காவது நாராயணனைப்

* அவ்வித அனுபவங்கள் நம் தேசத்திலுள்ளோர் அறியாதனவல்ல.

பிடித்துவந்த காட்டு மனிதனுக்காவது அரையில் வஸ்திரம் ஒன்றும் கிடையாது. கடவுள் படைத்தபடி நின்ற அந்த ஸ்திரீயை அந்தக்காட்டு மனிதன் பார்த்து 'நல்ல சாப்பாடு கொண்டுவந்து விட்டேன். உனக்குக்கூட ருசியாய் இருக்கும்படியான சாப்பாடு பத்திரமாய்ப் பார்த்துக்கொள்' என்று சொல்லிவிட்டு குகையைவிட்டு வெளியில் ஓடினான்.

(இன்னும் வரும்.)

ஆர். செல்வப்பிள்ளை, பி. ஏ.

---

## ஸ்ரீமத் திரவிட ஆயுள்வேதம்.

(திராவிட ஆயுள்வேத வைத்தியர் ஒருவர்எழுதியது.)

மானிடர்களுக்கு இன்றியமையாதன உடல், பொருள், ஆவி யெனு மூன்று. இம்மூன்றில் உடல்கொண்டே ஏனையவிரண்டும் இயலவேண்டுமாதலால், அதைப் பிணியின்றிப் போற்றல் வேண்டும். பிணியின்றிப்போற்றலாவது, அருந்தும் அறுவகைப் பதார்த்தங்களும் விரோதமில்லாததாய்க்குறைதலும், அதிகரித்தலும், காலந் தவறிப் புசித்தலு நீங்கி தீபனத்திற்குப் பொருந்திய அளவு புசித்து, இரவில் நித்திரைகொண்டு, அதிகாலையிலெழுந்து, பகல் உறக்கம் நீக்கி இருத்தலாம் என்ன,

"அருந்து மாறிரதமு மவிரோதமதாய்
அஃக லலர்த லகாலவூண் தவிர்ந்தழற்கு
உற்றளவு அருந்தி யுறங்கி"

என்றார் தேரையாரியர். இது தவறில் வாத பித்த சிலேஷ்மந் தொந்தமுற்ற பல்பிணிகள் வந்து சாரும். சார்தலும் அவைகளைப் போக்கும் உபாயங்களையாவது, அல்லது போக்குவோர்களையாவது தேர்ந்தறிதல் கடமை. இப்படி சார்தலுற்ற பிணிகளைப் போக்கு முபாயங்கள் ஆதியில் வடமொழியில் இருத்தலால், சிலர்க் கல்லது, இயம்பலும் படித்தலும், கருப்பொருள் உணர்தலும், செவ்வையாய் போதிப்பதும், பெரும்பாலோர்க்குப்பயன்படாதெனத் திருவுளங்கொண்டு, முற்று பேரின்ப வடிவாய் அமர்ந்துறையுஞ் சிவபெருமான் தன் அருட்சத்தியாகிய சிவபிராட்டியாருக்குத் தென்மொழியில் உபதேசித்தருளினர். பிராட்டியார் திருநந்தி தேவர்க்கும், நந்தி தன்வந்திரிக்கும், தன்வந்திரி அச்சுவனி தேவர்களுக்கும், தேவர்கள் அகத்திய முனிவருக்கும், அகத்தியர் புலத்தியப் பிரம்மரிஷிக்கும், பிரமரிஷி தன்மசௌமியருக்கும், சௌம்மியர் தேரையாரியர்க்கும் உபதேசித்தனர். இவர்கள் ஒவ்வொருவரும், தாங்கள் உபதேசக் கிரமமாய் ஓதியுணர்ந்தவைகளைப் பன்னாள் அனுபவமுற்றபின்னர், சின்னாட் பல்பிணிச் சிற்றறிவாளர்கள் உய்யும் பொருட்டுப் புத்தகங்கள் பல செய்தருளினர். இவைகள் எல்லாம், மானிடரை வாதிக்கும் பிணிகள் 4,448 என்று கூறி, அவைகளில் உள்ள பெரும் பிணிகளுடன் தொந்திக்குஞ் சிறுபிணிகளையும் அவைகள் பிடிக்கும் பருவங்களையும், சாத்திய வசாத்தியக் குறிகளையும், இக்குறிகளைக் கண்டறிதற்கு ஏதுவாகிய நாடி முதலிய அஷ்டவிதப் பரீக்ஷைகளையுமோதிப், பின்னர்அப்பிணிகளைப் போக்கும் ஔஷதிகளையுங் கூறியிருக்கின்றன. இத்தகைச் சீர்மையுற்ற கிரந்தங்களை "ஆயுள் வேதம்" என்று சிறப்பித்துக் கூறுவார்கள். இவைகளின் உண்மைகளை ஐயந்திரிபறக் கற்றுணர்ந்த பெரியோர்களை மருத்துவக்கலைஞர் என்று பல்லோரும் கொண்டாடுவார்கள். இத்துணைப் புகழ்பெற்ற மருத்துவர்கள் சில வருஷங்களுக்கு முன்னும், பல்லோரால் ஆதரிக்கப்பெற்று இருந்தார்கள். இக்காலத்தில் ஆதரிப்போர் அற்றார்கள். அறவே, உண்மை மருத்துவச் சிகாமணிகள் ஒழிந்தார்கள். ஒழிய, ஆயுள்வேதத்தின் பெருமைகளும், நூல்களும் குன்றற் கிடமாயின. இழந்ததுபோக, இருக்கும் நூல்களையோதுந் திறமையாளர்களும் தற்காலத்திலில்லை. இது நிற்க, முயற்சியில் சோர்வடையா ஆங்கிலேயச் சீமான்கள் நம்தேசத்திற்கு வந்து, தங்கள் மருத்துவத்தைப் பிரபலப்படுத்தி நம்மவர்க்கு உண்மை மருத்துவக் கலைகள் இல்லையென்று நகைக்கிறார்கள். இதுவும் உண்மையே. எங்ஙனமெனில், போலி மருத்துவர்களும் அவர்களுக்கேற்ற மருத்துவக் கலைகளும் வெளிவந்திருக்கின்றன. போலிமருத்துவக் கலைகள் உண்டாதற்குக் காரணமென்னெனில், சோழராஜன் புலவர் திலகராகிய புகழேந்திப் புலவரை முற்காலத்திற் சிறையிட்டான். இத்தகைத் துன்ய ண்டு திற்காளான புலவர், தன் வயிறு வளர்ப் பசினால் தண்ணீர்கொண்டுபோகும் பெண்கள் பொறுத் இனிமையான பல கவிகளைச் சொல் இருந்தேன்.

டிருப்பார். பெண்கள் கேட்டு ஆனந்தமுற்று சொல்லிய கவிகளை ஓலைகளில் எழுதிவைக்கும் ஆவலுற்றவர்களாய்ப் புலவர்பாலணுகி, அவர்க்கு வேண்டு உபசாரங்கள்செய்து, தானியங்கள் முதலியன கொடுத்து ஆதரித்து வந்தார்கள். இப்பெண்களுக்காகவே, இப்பொழுதும் கடைகளில் விலை சரசமாக விற்கும் 'கோவலன் கதை,' 'அல்லிஅரசாணிமாலை' முதலியவைகளைப்புலவர் அருளிச்செய்தனர். இவர்பெருமை இவ்வண்ணமாய் உலகப் பிரசித்தியாக, அநேக மூடசிகாமணிகள், புலவர்பால் வந்து, வைத்தியம் ஜாலம் முதலியவைகளைக் கேட்கத் தலைப்பட்டார்கள். புலவர் இவர்கள் வேண்டுதலுக்கியைந்து, தான் பாண்டியன் பால் இருக்கும்போது பல்லோரால் கேள்விப்பட்டவைகளில் உண்மையுற்ற வைகளையும், இன்னும் அநேகமவைகளையும் புனைந்து, கல்லாதார்க்கும் எளிதிற் புலப்படும்படியாகச் செந்துறை யாப்பால் தன்சீடர்கள் நம்பும்வண்ணம், ஆயுள்வேதஆசிரியர்களாகிய நந்தி, அகத்தியர், தேரையர்,முதலியோர் பெயர்களை இட்டுப் பல கிரந்தங்களைக் கூறினர். புலவர் கூறிய இத்தன்மைப் புத்தகங்களை யவர்கள் மனனஞ் செய்தும், இவை போன்ற பல புத்தகங்களைத் தாங்கள் இயற்றியும்வந்தார்கள். இவைகளைத்தற்காலத்தில், சென்னையில் தெருக்கள்தோறும் ஸ்தாபித்திருக்கும் அச்சியந்திரசாலையார்கள் பதிப்பித்துக் குறைந்தவிலைக்கு எழுத்துமுதற் பலபிழைகள் மலிந்துள்ளதாய் விற்கிறார்கள். கற்றறியாப் பலர்கள் இவைகளை வாங்கி, அவைகளிற் குறித்த சிகிச்சைகளைச் செய்து, வீணை வருகிறார்கள். இவர்கள் செய்வதும் தங்கள் வயிற்றுப் பாட்டிற்கேயல்லது வேறெதற்குமின்று.

(இன்னும் வரும்.)

---

## புருஷன் மனைவி சம்வாதம்.

மனைவி.—இதென்ன! தர்மாம்பாள் கல்லியாண விஷயத்தைப்பற்றிப் பேசாமல் இருக்கிறீர்களே. வயது பத்து ஆய்விட்டது. இவளுடைய வயசுப் பெண்களுக்கெல்லாம் கல்லி[யா]ணம் ஆய்விட்டதே.

[புருஷன்.]—இதற்குள் என்ன அவஸரம்! மெள்ள [இரு]க்கட்டுமே.

மனைவி.—இப்பொழுதே வளர்ந்துவிட்டாள். இன்னொரு வருஷத்துக்கெல்லாம் குதிர்போல் ஆவாள். கன்னியாப்புடவை கொஞ்சங்கூட நன்முயிராது.

புருஷன்.—வளர்வது நல்லதுதானே.

மனைவி.—இவ்வளவு பெரிய பெண்ணைக் கல்லியாணஞ் செய்யாமல் நிறுத்தலாமா.

புருஷன்.—எத்தனையோ பேர்கள் பதினாலு பதி பதினைந்து வயசுப்பெண்களைக் கலியாணமில்லாமல் வைத்துக்கொண்டிருக்கிறார்களே. அவர்களுக்கு என்ன வந்துவிட்டது, யார் என்ன சொல்லுகிறார்கள்.

மனைவி.—சொல்லத்தான் சொல்லுகிறார்கள். எதுவும் காலாகாலத்திலே நடந்தால்தான் நன்றாயிருக்கும். காலந்தப்பினால்சங்கடந்தான். மேலைத்தெரு பார்வதிபெண்ணுக்கு-13 - நிரம்பி-14-வது வயது: அகமுடையான் அகப்படவில்லை. பெண்ணை வைத்துக்கொண்டு தவிக்கிறாள்.

புருஷன்.—தவிப்பானேன், லோகத்தில் அவளுக்கு அகமுடையான் அகப்படாமல் போய்விடுமோ?

மனைவி.—பெரியவளாகிவிட்டால் என்ன பண்ணுகிறது. பெண்ணுக்குச் சூத்திரஜன்மம் வந்துவிடும். தாய்தந்தையர்களுக்குப் பாவமும் பழியும் சம்பவிக்கும்.

புருஷன்.—சாஸ்திரங்களில் அப்படி ஒன்றுஞ் சொல்லவில்லையே.

மனைவி.—லோகவழக்கந்தான் நமக்குச் சாஸ்திரம். ஊருக்கொருவழி, நமக்கொருவழி சரியன்று. சீக்கிரத்தில் நல்லபிள்ளையாய் விசாரியுங்கள். இப்பொழுது முதல் விஜாரித்தால்தான் முன்பின் சுமாராய் அகப்படும்.

புருஷன்.—இன்னம் இரண்டு மூன்று வருஷம் செல்லட்டும். இப்போது கலியாணத்தைப் பற்றிப் பேசமாட்டேன்.

மனைவி.—அதற்குள் நல்ல சிறுபிள்ளைகளுக்கெல்லாம் கல்லியாணம் ஆகிவிடும். நம்முடைய பெண்ணை எங்கேயாகிலும் இளையாளாகக்கொண்டு தள்ளவேணும். கிழவனுக்கோ, பெண் மேற்பெண்ணுகவோ, எங்கேயாகிலும், கிணற்றில் தள்ளுவதற்குப் பதிலாகத் தள்ளவேண்டியிருக்கும்.

புருஷன்.—அப்படிக்கெல்லாம் நமக்கு நேரிடாது. படித்தவனாகச் சிறுபிள்ளை அகப்படுவான். நீ பயப்படாதே.

மனைவி.—நீங்கள் சொல்லு கிறீர்கள். ஊரில் பிள்ளைகளுக்குப்படுகிறபாடு உங்களுக்குத்தெரியாது.

* அவ்வி[...] அறியாத[...]
[...] அவண.

சிவகாமியைகரு-வருஷம்அருமையாகவளர்த்து கிளியை வளர்த்துப் பூனைக்கு இரை கொடுக்கிறாப்போல், 50-வயசுக் கிழவனுக்கு நகைக்கு ஆசைப்பட்டுத் தள்ளினார்கள். இப்போது சந்தியில்நிற்கிறது. நகையிருந்தென்ன, பணம் இருந்தென்ன. அதினுடையஜென்மம் பாழாய்ப்போய்விட்டது. லட்சுமி பெண் அபிராமிக்கு தேடித்தேடியும் ஆம்படையான் அகப்படாமல் கடைசியில் பெண்மேல் பெண்ணைக் கொடுத்தாள். மூத்தாளுக்கும் இளையாளுக்கும் ஒற்றுமையில்லாமல் பாரத யுத்தம் நடக்கிறது. ஊர் சிரிப்பாகச் சிரிக்கிறது. மூத்தாள் இவளை வாழ விடுகிறதில்லையாம்.

புருஷன்.—இதெல்லாம்எனக்குத்தெரியாதா என்ன, ஊர்வம்பெல்லாம் எனக்கேன். இப்போது குட்டிக்குக் கலியாணம் செய்யப்போகிறதில்லை.

மனைவி.—செய்தால் என்ன, தாமஸம் ஏன் செய்ய வேணும், அவளுக்கு வயதாக வில்லையா.

புருஷன்.—பாலியவிவாகம் நிரம்பக்கெடுதல்.

மனைவி.—பின்னை எப்போது விவாகஞ்செய்கிறது, முப்பது வயதுக்கா.

புருஷன்.—அப்படித்தான் செய்தாலென்ன? மெள்ள ஆகட்டுமே.

மனைவி.—வெள்ளைக்காரச்சி மாதிரி, அறுபது வயதுக்குக்கூடச் செய்யலாம், லோகம் நம்மைத் தலைமேல் வைத்துக்கொண்டு கொண்டாடும்! நன்றாயிருக்கு! நம்ஜாதியில் அப்படிச்செய்யலாமோ?

புருஷன்.—பெண்ணுக்குந் புத்திவந்து பர்த்தாவை வரிக்கிறதற்குத் தகுந்த வயசு வந்த பிறகு தான் கேட்டு விவாகம் பண்ணி வைக்கலாம். அதற்குள் செய்வது பிசகு.

மனைவி.—இப்போது ஊரிலெல்லாம் அப்படித் தான் செய்கிறார்களோ. பெண் அதற்குள் பெரிதாகி விட்டால் என்ன பண்ணுகிறது.

புருஷன்.—பெரியவளானால் ஆகட்டுமே, வீட்டிலேயே இருக்கிறாள்.

மனைவி.—நன்றாயிருக்கிறது. லோகத்தார் பெரிதானபெண்ணைக் கலியாண மில்லாமல் வீட்டில் வைத்துக்கொண்டிருக்கிறாரென்று பரிகாசம் பண்ணுவார்களே. பெரியபெண்ணை யார்கட்டிமேய்க்கிறது. அபவாதம் வந்தால் என்ன செய்கிறது. ஓர் தாலியைக் கட்டிவிட்டால், மாப்பிள்ளை எல்லா பாரத்தையும் ஒப்புக்கொண்டு போகிறான்.

புருஷன்.—நம்மைமீறி மோசம் நேரிடுமா, எவ்வளவு பேர்கள் ருதுசாந்தி பண்ணாமல், வீட்டில் பெண்ணை வைத்துக்கொண் டிருக்கிறார்கள். எவ்வளவு பாலிய விதவைகள் வீட்டில் இருக்கிறார்கள். எவ்வளவுபேர்கள் புருஷனைப் பிரிந்து தனியே இருக்கிறார்கள். அப்படி யிருக்கக் கலியாணம் செய்யாத சிறிய பெண் வீட்டில் இருந்தால் கெடுதி என்ன?

மனைவி.—இவைதான் தீராப்பொறி. அவாள்அவாள் விதியைத்தொலைக்க வேண்டி யிருக்கிறது. புருஷன் வீட்டில் சுகமாய் வாழுங்காலத்தில், வீட்டில் வைத்துக்கொண்டிருப்பதில் பலனென்ன.

புருஷன்.—வினைத்தெரியாத காலத்தில், பரஸ்பரம் ஸ்திரீபுமான் என்கிற ஞானமில்லாத பருவத்தில், புக்ககத்தில், மாமி, மாமனார் முதலியவர்கள் இடிக்க, புருஷன்பேசாமல் இருக்க என்ன சுகம் கிடைக்கப்போகிறது.

மனைவி.—லோகத்தில் மாமியார் நாத்தனார் இல்லாதவீடு சொற்பம். எப்போதும் அவர்களுக்கு அடங்கிக்குடித்தனம் பண்ணுவது நலம். இரண்டொரு வருஷம் பட்டால் தானே தெரிந்து போகும். விளையும்பயிர் முளையிலே. செடியில் வளையாதது, மரத்தில் வளையுமா? பால்லியத்திலே புக்ககத்துக்குப்போனால், அவளுடைய மாதிரி சீக்கிரம் படியும். வயசுசென்றால் பிறகு வணங்காது.

புருஷன்.—[illegible]தில் மன உற்சாக மில்லாமல் கடும் [illegible] பெண்களைப்போட்டால், உடம்பு நொறுங்கிப்போகும்.

மனைவி.—நான் இந்தவீட்டுக்கு வரும்பொழுது ௧௧-வயசு. எல்லாரும் இருந்தார்கள். நான் எல்லாருக்கும் சமைத்துப் போட்டுக்கொண்டு வந்தேன். அதற்கு என்ன இப்போ.

புருஷன்.—எங்கள்வீட்டில் மருமகளுக்கு மெத்த சுகம். அவர்கள் எதைச்சாப்பிட்டாலும் கொட்டினாலும் கேட்கிறதில்லை. எல்லார் வீட்டிலும் இப்படியே இருக்குமோ.

மனைவி.—நான் இங்கே பட்டபாடு கொஞ்சமோ. உங்களிடத்தில் ஒன்றும் சொல்லுகிறதில்லை. ஆயிரம் பாம்பின் கீழ் ஓர் தவக்களை வாழ்கிறாப்போல் நான் வாழ்ந்துகொண்டு வந்தேன். என்னைப் பெரிய நாத்தனார் தேள் கொட்டுகிறாப்போலே கொட்டுவள். ஓர்ப்படி உர்உர் என்று உறும்புவள். சிந்தினால் மாமியார் செருப்பாலே அடிப்பள். கொட்டினால் கொட்டாப்புள்ளியினால் நறுக்குவள். அந்தக்காலத்திலே உங்களுக்கு அவள் சொல் வேதவாக்கியம். வாயை அசைத்தால் விளக்குமாற்றை எடுத்துக்கொண்டு வீறுவீர்கள். விண்டால் வில்லங்கம், பேசி[illegible] துன்பம் என்று, என்னசெய்தாலும் [illegible]துக்கொண்டு தெய்வமே என்று இருந்தேன்.

ஒவ்வொரு சமயத்தில், ஆற்றிலே குளத்திலே விழுந்து பிராணனைவிட்டுவிடுவோமோ என்று கூடத் தோன்றும்.

புருஷன்.—பழங்கதை எல்லாம் இப்போ ஏதுக்கு. பொறுமையில் பூமிதேவிக்குப் பிறகு நீ தான். உன் பெருமையை என்னிடத்தில்தான் கொண்டாடிக்கொள்ளவேணும்.

மனைவி.—என்னைக்கண்டால் பரிகாசந்தான். ஒவ்வொரு ஆங்களில் போய்ப்பார்த்தால் தெரியும். நான்என்ன தலையால்நடந்தாலும் உங்களுக்குத் திருப்தியில்லை. கண்ணைப்பிடுங்கிக்கையில் கொடுத்தாலும் செப்பிடு வித்தையென்று சொல்லுவீர்கள். நான் பெண்பிறந்து யாருக்கு நல்லவள். என் கடன் நான் உழைக்கவேண்டியது. பிடுங்கல் பட ஜென்மம் எடுத்தேன். இதற்குத் தான், நான், "ஏன் கிமா" என்கிறதில்லை. என் பாபத்தைக்கொட்டிக்க கடைசிகாலத்தில்எனக்கு ஓர் பெண் பிறந்ததே. நான் வெறுமே இருந்தாலும் ஊர் வாயை யார் மூடுகிறது. வெளியிலே புறப்பட்டால்பிடுங்கி எடுத்துவிடுகிறார்கள், ஆறுகுளத்துக்கு எப்படிப்போகாமலிருக்கிறது.

புருஷன்.—என்ன சொல்லுகிறார்கள்.

மனைவி.—காலஸ்திதி தெரியாம[illegible]ப்படிக்கு இருக்கிறாயே அம்மா! புருஷ[illegible]ல் ஓர் வார்த்தை சொல்லப் போகாதா? அவர் சும்மாவிருந்தாலும் நீ இருக்கலாமா? பெண்களுடைய கஷ்டம் புருஷாளுக்கு என்ன தெரியும். காலத்தில் கன்னிகாதானம் பண்ணினால் ரொம்ப புண்ணியமுண்டு, மெள்ளச் சொல்லிப்பார் என்கிறார்கள்.

புருஷன்.—நமக்குக் கன்னிகாதான பலன்கிடைப்பதற்காக 4-வயதிலேயும், மூன்றுவயதிலேயும் பெண்ணைச் சொள்ளைக்கும் சொத்தைக்கும்கட்டிக் கொடுத்துவிட்டு, சுவரத்தில்போய் விடுகிறதோ, பேதியில் போய்விடுகிறதோ என்று விசாரப்பட என்னால் முடியாது. எனக்கு இஷ்டமில்லை.

மனைவி.—உங்களுக்கு என்ன? நீங்கள் ஓர் தாலியைக் கட்டிவிடுங்கள். அதினுடைய அதிர்ஷ்டம், உள்ளபடி ஆகிறது.

புருஷன்.—இப்போ அப்படியாவது என்ன. இரண்டு மூன்று வருஷம்போகட்டுமே. இந்த அதிர்ஷ்டம் அப்போது வரமாட்டாதோ.

* அ. மனைவி.—நான்எது கேட்டாலும்எப்போதும்எதிர்க் அறியாதட்சியும் தூர்க்கட்சியுந்தான். இன்னம் மூன்று [illegible]ஷத்துக்குஇருப்பேனோ, போவேனோ, கலி[illegible]த்தைப்பண்ணிக் கண்ணாலே பார்ப்போமென்றால்இதற்கு இத்தனை எச்சம்பேச்சும் என்னத்திற்கு?

புருஷன்.—மற்றைப்பேரெல்லாம் சாசுவதமோ, யாருக்கு எந்த வேளையில் என்னவருமோ என்று யோஜித்து தான் கல்லியாணம் பிறகு ஆகட்டுமென்கிறேன்.

மனைவி.—இன்னம் நாலுவருஷம் கழித்து ஓர்பெரிய தடியனுக்கு கொண்டுதள்ளுங்கள். பூதம்போலமாப்பிள்ளையை வைத்துக்கொண்டு என்ன பண்ணுகிறது. நலங்குக்குநகரமாட்டான், ஊர் கோலத்துக்கு எழுந்திருக்கமாட்டான். மாலையிட அவனையார்தூக்குவார்கள். நலங்கிடக்கிட்டயார் நெருங்குவாள். கல்லியாணப்பந்தலில் கேளிக்கையும் விளையாட்டும் கோஷிக்கும்!

புருஷன்.—கேளிக்கையும், விளையாட்டும், நாம்பார்ப்பதற்காக, பெண்ணை ஓர் சிறுவனுக்குக்கட்டிவிடலாமோ. இப்போது இன்னும் தாயின்முலைப்பாலை மறந்துபோகிறதற்கு வயது ஆகவில்லை. அப்படி, ஆம்படையான் வேணுமென்று அலைந்து திரியவுமில்லை. கல்லியாணம் சாசுவதமான விஷயம். மறுபடியும் திருப்பிச்செய்கிற காரியமல்ல. தீர ஆலோஜித்து நடத்தவேணும்; போகட்டுமே.

மனைவி.—லோகத்தில் ஏழுவயதிலும் எட்டு வயதிலும் பெரிய மனுஷாள் எல்லாரும் செய்கிறார்கள். புதுக்கோட்டை திவான் வீட்டிலே இப்போ கல்லியாணம் நடந்தது. பெண்ணுக்கு ஏழு நிரம்பி எட்டாம் வயசு. மயிலாப்பூரில் பெரிய ரிஜிஸ்தர்வீட்டில் நாலு கல்லியாணம் நடந்தது. பெண்களுக்கு பத்து பதினொன்றுக்கு மேல் இல்லை. இவாளெல்லாம் யோஜிக்காமல் தான் செய்கிறார்களோ. அவாத்துப் பெண்களைவிட நம்மாத்துப்பெண் என்ன உச்சிதம்.

புருஷன்.—ஊரிலுள்ள வியாபாரங்களெல்லாம் என்னிடத்தில் சொல்லவேண்டாம். புருஷன் விஞ வருவதற்குமுன் கல்லியாணஞ் செய்விப்பது கிரமமல்லவென்று எனக்குப்படுகிறது.

மனைவி.—உங்களுக்கு மாத்திரம் இப்படிப் படுவானேன். உங்கள் அண்ணன் தம்பிமார்களெல்லாம் இப்போ இருக்கவில்லையோ, லோகவழக்கப்படி.

புருஷன்.—என்மனசாட்சிக்கு விரோதமாய்ச் செய்யமாட்டேன்.

மனைவி.—இந்த இங்கிலீஷ் வாசித்தவர்களுக்கெல்லாம் "மனசாட்சி" என்று ஒன்று தலைப்பட்டது. கோவிலில்லை, குளமில்லை, நல்லநாளில்லை, கெட்டநாளில்லை, சந்திஇல்லை, பூஜை

இல்லே, ஆசாரமில்லே, அனுஷ்டானமில்லே. அவாள் பிடித்தது பிடிவாதம்.

புருஷன்.—அப்படி அவர்களுடைய நடவடிக்கை என்ன கெட்டுப்போயிருக்கிறது, பொய்சொல்லுகிறுர்களா, திருடுகிறுர்களா, துன்மார்க்கம் செய்கிறுர்களா.

மனைவி.—மற்றைப்பேர் மாத்திரம் இப்படி எல்லாம் செய்துகொண் டிருக்கிறுர்களாக்கும். படித்தவர்களெல்லாரும் சுத்தமாய் இருக்கிறுர்ளாக்கும். இக்காலத்தில் எல்லாம் ஒன்றுய்த்தான் இருக்கிறது. ஜென்மாந்திர பாபபுண்ணியத்தின்படி நடக்கிறது.

புருஷன்.—பெரும்பாலும் படித்தவர்கள் விவேகிகள்தான். ஸ்திரீகளை அடிக்கிறதில்லே, தூஷணமான பேச்சுப்பேசுகிறதில்லே, வீண் பொழுது போக்குகிற தில்லே. லஞ்சம் முதலியவைகள் வாங்குகிறதில்லே.

மனைவி.—இப்படிக்கெல்லாம் இருந்தால், லோகவழக்கத்தையும் ஜாதி ஆசாரத்தையும், விட்டுவிட வேணுமோ.

புருஷன்.—ஆசார அனுஷ்டானம் பிறருக்குத்தீமை விளைவிப்பதாய் இருந்தால், அதை விட்டு விடத்தான் வேணும்.

மனைவி.—இப்போ குழந்தைக்கு கலியாணம் செய்வதில் யாருக்கு என்ன நஷ்டம் எனக்குத்தெரியவில்லே. கோபித்துக் கொள்ளாமல் சொல்ல வேணும்.

புருஷன்.—சொல்லட்டுமா, கவனித்துகேட்கிறுயா.

மனைவி.—ஆகா.

புருஷன்.—முதலாவதுபடிப்புக்கெட்டுப்போம். கல்யாணமானபிறகு, அவளுடைய மாமனர் மாமியார் வேண்டாமென்றுல் நிறுத்தவேண்டியிருக்கும்,

மனைவி.—கெட்டுப்போவானேன். ஆத்தில் படிக்கிறுள் ஸ்கூவில்படித்து பாஸ்செய்து உத்தியோகம் பண்ணப் போகிறுளோ? ஆத்தில் இருந்து தெரிந்துகொண்ட மட்டும் குடித்தனப் பெண்ணுக்குப் போதுமே. நாளைக்குக் கலியாணமானுல், சமைக்கவும், தூங்கவும்கூடபோது இருக்காது.

புருஷன்.—உத்தியோகத்துக்குத்தான்வாசிக்கிறதோ, படித்தால் புத்தி தீட்சணிய முண்டாகும். விவேகமும், ஞானமும் விர்த்தியாகும். வீட்டுகணக்குகள், சிலவு சில்லரைகள் பார்க்கலாம். குழந்தைகளுக்கு படிப்பு சொல்லலாம். ஒழிந்த வேளையில் ஊர்வம்பு, அவிசாரி புராணம் கேட்காமல் காலட்சேபம் செய்யலாம். புருஷன் ஊருக்குப் போயிருக்கும் காலத்தில் கடிதம் முதலியன நேரிலெழுதி க்ஷேமத்தை விசாரித்துக் கொள்ளலாம். லோக வர்த்தமானம் பாத்து அனேக விஷயங்களை அறிந்துகொள்ளலாம். பணத்தினுடைய அருமைதெரியும், நகையிலும் புடைவையிலும் பணத்தைவீணுய் செலவழிக்க மனசு வராது.

மனைவி.—நாங்கள்படிப்பில்லாதிருக்கிறுமே, குடித்தனத்தை என்ன சீர் அழிக்கிறும். எங்களைவிடப் படித்த பெண்கள் எதில் விசேஷம். முகத்தில் மஞ்சள் பூசுகிறதில்லே, நெற்றியில் பொட்டு வைக்கிறதில்லே. சட்டையைப் போட்டுக்கொண்டு, மினுக்குகிறுர்கள். சாணியை கையால் தொடுகிறதில்லே, துரும்பை விரலால் நகத்துகிறதில்லே. மூலேக்கு மூலே சாமான்களை போட்டவிடத்தில் போட்டுவிட்டு கதைப்புஸ்தகத்தை கையில் தாங்கி கால்நீட்டிக்கொண்டு யார்வந்தாலுமில்லே, இருந்தாலுமில்லே உட்கார்ந்துகொண் டிருக்கிறுர்கள்; அவாளுக்கு ஆம்படையான் என்றுல்கூட கணிசமில்லே.

(இன்னும் வரும்.)

ஆர். சக்கரவர்த்தி ஐயங்கார், பீ. ஏ.

## அறியாய அபவாதம் அல்லது கமலாம்பாள் சரித்திரம்.

மதுரைஜில்லாவில் சிறுகுளம் என்ற ஒருகிராமம் உண்டு. அந்தகிராமத்தின் நடுத்தெருவின் மத்தியில் பெரிய வீடென்று பெயருள்ள ஒரு வீடு இருந்தது. அந்தவீட்டில் கூடத்திற்கு அடுத்த ஓர் அறையில் கீழே ஒரு கோரைப்பாய் விரித்து அதன்மேல் ஒரு திண்டுபோட்டுச்சாய்ந்துகொண்டு ஒருவர்படுத்திருந்தார். அவர் நித்திரைதெளிந்து எழுந்திருந்தவுடன், 'ஆ, சம்போ, சங்கரா' என்று இரண்டுதடவை உரக்கக்கொட்டாவிவிட்டு விட்டு, காலேச்சொரிந்து கொண்டு, 'அடியே அடியே' என்று கூவினுர். அப்பொழுது கூடத்தில் இரவிக்கை தைத்துக்கொண்டிருந்த அவர் மனைவி இவர்குரல் காதில்கேட்டவுடன் இரண்டு முறை இருமிவிட்டு மௌனமாய் இருந்தாள்.

அதற்குள்படுத்திருந்த பிராமணர் 'அடியே, உன்னைத்தானடி, அடியே' என்று மறுபடியும் அழைத்தார்.

அதற்கு அந்தஅம்மாள் கோபித்தவள்போல பாவனைசெய்துகொண்டு இங்கே அடியையும் காணும், நுனியையும் காணும், அடியாம், அடிக்கவேண்டியதுதான், காசுகொடுத்துச்சந்தையில் வாங்கினுற்போல்தான். இனிமேல், அப்படிச்சொல்லுங்கள், வழிசொல்லுகிறேன்.' என்றுபரிகாசமாய்ச் சொன்னுள்.

அதற்கு அவர், 'சூ, சூ, எவ்வளவடா', என்று சொல்லிவிட்டு, 'துரைமகளாணுலும் பாரி உரியவனு-

க்கவள் ஊழியக்காரி' என்று சங்கீதம் பாடத் தொடங்கினர்.

அதைக் கேட்ட அம்மாள்: 'உங்களைப்போல் அவன் ஒரு புருஷன் தானே, வேதநாயகம் பிள்ளையாம், கரியாவான். இனி வெள்ளைக் காரச்சிகளைப்போல் ஆரம்பிக்கவேண்டியது தான்; அடியாவதென்ன, அடி! எங்களப்பா இரண்டுகரை வைத்தாண்டார், எங்கள் பாட்டனர் மூன்றுகரை வைத்தாண்டார்; சந்தையில் கொண்டுவந்து தள்ளிவிட்டாப்போல், 'அடி' என்று கூப்பிடுவது என்ன' என்றாள்.

அதற்கு அவர் 'மூன்று கரையாகப் போவானேன், அக்கரை, இக்கரை, குளக்கரை, மயானக்கரை ஒன்று ஆகநாலு இருக்கிறது' என்றார்.

அதற்கு அந்த அம்மாள் 'எங்களுக்கு அதுதான் உண்டு, நீங்களெல்லாம் ஸரபோஜி மஹாராஜா பிள்ளைகள், உங்களுக்கும் எங்களுக்குமா, உங்களுக்கு நாங்கள் அடிமைதான்!' என்றாள்.

அவர் 'அடியேன் செய்த பிழையை தேவரீர் பொருத்தருள வேண்டும் 'சிறியோர் செய்த சிறு பிழையெல்லாம் பெரியோராகிற் பொறுப்பது கடனே.' ஓ ராஜராஜேஸ்வரி கமலாம்பாள், தயவு செய்து கொஞ்சம் தீர்த்தம் சாதிக்க வேண்டும்,' என்று சொல்ல: அம்மாள் 'எங்களகத்தில் தீர்த்தம் கொடுக்கிற வழக்கமில்லை' என்றாள். அவர் 'கொடுத்தால் தான் உனக்குப்பிள்ளை பிறக்கும்பார்' என்றார். அதற்கு அம்மாள், 'ஆ, இருக்கிற பெண்ணைகாப்பாற்றினல் போதாதா, பிள்ளையும் குட்டியும் இல்லையென்று இப்பொழுது யார் உங்களிடம் சொன்னார்கள்?' என, ஐயர் 'சொல்லாவிட்டாலும் மனதிற்குள்ளாவது இருக்குமல்லவோ, இப்பொழுது தீர்த்தம் கொண்டுவந்தால், இதற்கு மூன்றாவது மாதத்தில் ஒருபெரிய ஆண்பிள்ளை பிறக்கும்' என்றார். என, அவர் மனைவி: 'மூன்று மாதம் போவானேன், இப்பொழுதேசெல்லப்பிள்ளை நீங்கள் இருக்கிறீர்களல்லவோ' என்று சொல்லிவிட்டு உள்ளேபோய் ஒரு தட்டில், தேங்குழல், எள்ளுருண்டை முதலிய பக்ஷணங்களை எடுத்துக்கொண்டு, கையில் பனிபோல் ஜிலுஜிலென்று குளிர்ந்த தீர்த்தமும் கொண்டுவந்து நமது ஐயா படுக்கை அருகில்வைத்து விட்டு 'அப்பா!' என்று அவர்மேல் சாய்ந்துகொண்டாள். உடனே அவர் அவளை இறுகத்தழுவிக்கொண்டு பக்ஷணங்களை கணக்குப்பார்க்கப் புகுந்தார். பாதிசாப்பிட்டானபிறகு, தன்மனைவி பராக்குப்பார்த்திருந்த சமயங்கண்டு அவள் இரண்டுகைகளையும் பிடித்துக் கொண்டு, 'ஏனடி, நிரம்பப் பெரிய மனுஷியாய்விட்டாயோ? 'அடியே' என்றால் ஸரபோஜி மஹாராஜா பிள்ளை என்று பரிகாசம்பண்ணுகிறாயா என்று கன்னத்தில் மெதுவாய் அடித்தார்; அம்மாள் சிரித்துக் கொண்டு, 'இல்லை, இனிமேல் இல்லை' என்று சொல்லிவிட்டு, 'மரியாதையாய்க் கையை விட்டுவிடுகிறீர்களா! இல்லாவிடில் கூச்சலிடட்டுமோ?' என்றாள்; ஐயர், 'கூச்சலிடு, யார்வருகிறார்கள் பார்ப்போம்' என்றார். அம்மாள் 'ஐயோ' என்று மெதுவாகச் சொல்லி கூச்சலாய் இட, ஐயர் மறுபடியும் கன்னத்தில் மெல்ல அடித்துவிட்டு கையை விட்டுவிட்டார். பின் இரண்டுபேருமாய் அதிக சுறுசுறுப்புடன் பக்ஷணங்களைத்தின்றவுடன், அம்மாள் 'இப்படி பக்ஷணம் தின்றுகொண்டிருந்தால் நம்முடைய குட்டி கல்லியாணிக்கு எப்பொழுது கலியாணஞ்செய்கிறது' என்றாள். அதற்கு அவர் "யாரோ அழகுக்கு அழகுசெய்வார்?" அவளே கல்லியாணி ஆய்விட்டதே: இனி அவளுக்கு கல்லியாணம் எதற்கு என்றார். அதற்கு அவர் மனைவி 'உலகம் புத்தியற்ற உலகம்,' ஆயிரம் ஐந்நூறு என்று செலவழித்து கல்லியாணங்களைச் செய்துகொண்டு வருகிறார்கள். சுருக்கமாக 'கல்லியாணி' என்று பெயரை வைத்துவிட்டு இருந்துவிடலாமே, நமக்குத்தெரிந்த இந்தப்பரமரகசியம் ஒருவருக்குந் தெரியவில்லை பாருங்கள்' என்றாள். அவர் 'கல்லியாணி எங்கே கண்ணிலேயே காணேம்' என, 'அந்தக்குழந்தை அடுத்தகத்துப் போயிருந்தாள்' என்று சொல்லிவிட்டு அந்தம்மாள் 'கல்லியாணி' என்றழைத்தாள். அந்தக்குழந்தை 'எங்களண்ணா அழைக்கிறார்கள்' என்று தன் தோழிகளிடத்தில் விடைபெற்றுக்கொண்டு புஸ்தகமும் கையுமாய் வந்து நின்றாள்.

'ஒரு காரியம், "புஸ்தகம் ஹஸ்த பூஷணம்" என்றபடி நமது கல்லியாணி, அண்ணாவைக் காணும்போதெல்லாம் கையில் புஸ்தகமில்லாமல் இருக்கிறதில்லை' என்றார். அதற்கு அந்தக் குழந்தை 'இல்லை, அண்ணா! படித்துக்கொண்டுதானிருந்தேன், மீனாட்சியை வேண்டுமானால் கேளுங்கள் அண்ணா' என்றாள். அதற்கு அவர் அவளைபபரிசோதனைசெய்யும் பொருட்டு "ஓரங்கல்படி' என்று ஆடிக்கொண்டிருந்தாயே எனக்குக் கேட்கவில்லையோ" என, 'இல்லை அண்ணா நிச்சயமாகவாசித்துக் கொண்டு தான் இருந்தேன்' என்றாள். அவர்புஸ்தகத்தை அப்படியே கொடுஎன்றுவாங்கி, 'அதுதான் நல்ல பாட்டுகளாய்த்தெரிந்தெடுத்து உரை உடன்சேர்த்துச் செய்த கம்பராமாயணச்செய்யுள் திரட்டாயிருக்கக் கண்டுகடைசியில்எந்த இடத்தில்நிறுத்தினாய்?' என்று கேட்க, கல்லியாணி, 'சூர்ப்பநகை இராவணனிடத்தில்போய் முறையிட்டுப் போர்மூட்டுகிற இடம்' என்று சொன்னாள். உடனே ஐயா தன்மனைவியைப் பார்த்து ஸ்திரீகள்தான் உலகத்தில் கலகத்திற்கெல்லாம் காரணம். சீதை யில்லாவிட்டால் இராமாய

ணம் ஏதென்றுசொல்ல, மனைவி:'ஆமாம் ஸ்திரீகள் பேரில் ஆசைவைத்துப் புருஷர்கள் கெட்டலைந்தால் அதற்கு ஸ்திரீகள்தான் காரணம்; இராவணன் 'கெட்டதுசீதையினாலேயோ, அல்லதுதன்கொழுப்பினாலேயோ', என்றாள். அதற்குஅவர்: 'அதுபோகட்டும் இன்னொருவிசேஷம் பார். இராமாயணப் போருக்கு முதல் முதல் காரணமாய் இருந்ததும்பெண், அதை நடுவில்நின்று மூட்டிவிட்டதும் பெண் (சூர்ப்பநகை) இல்லையா? இதிலேதான் வால்மீகியின் சாமர்த்தியம் முக்கியமாய்விளங்குகிறது. நாரதர்கலகப்பிரியர் என்றுசொல்வது வழக்கம்; ஆனால் நாரதர்கூட இவ்வளவுபெரிய யுத்தம் உண்டுபண்ணினதில்லை. இவ்வளவு ஜாலமும் மோசமும் அவர் கனவிலும் கண்டறியார். தான் யாரிடத்தில் போய் சண்டை மூட்டுகிறாரோ அவர்களுக்கு சூர்ப்பனகை இராவணனுக்கு உண்டு பண்ணின அவ்வளவுகேடு செய்வதில்லை. பத்து நாரதர் சேர்த்தால் ஒரு சூர்ப்பநகை ஆகாது' என்றார். அதற்கு அவர் மனைவி 'அப்படியே இருக்கட்டும். உலகத்தில் புருஷர்கள் எல்லாம் இராவணனையும் கும்பகர்ணனையும் போலிருந்தால் ஸ்திரீகள் எல்லாம் சூர்ப்பநகையாக இருக்கட்டுமே!' என்றாள். ஐயர் மேல்சமாதானம் ஒன்றும் சொல்லத் தோன்றாததினால், குழந்தை கலியாணியைப் பார்த்து: 'உனக்கு இராமனைப்போல் புருஷன் வேண்டுமோ, இலட்சுமணனைப்போல் வேண்டுமோ' என்றார். கலியாணி வெட்கத்துடன் தலைகுனிந்து மௌனமாயிருந்தாள். அப்பொழுது அவர் 'இராமன் கறுப்பு, இலட்சுமணன் சிவப்பு, இராமன் அப்பாவி அவனுக்கு அழத்தான் தெரியும். இலட்சுமணன் நல்ல தீரன்; பார், இராமன் 'காட்டுக்குப்போ' என்றதற்கு முன் புறப்பட்டு விட்டான். இலட்சுமணனே தைரியமாய் எல்லாரையும் கொன்றுவிடுகிறேன் என்றான். இராமனுக்கு இலட்சுமணன் எவ்வளவோ திறம். எல்லாவற்றையும் யோசித்து சீக்கிரம் பதில்சொல். நான் கலியாணத்திற்கு ஏற்பாடு செய்யவேண்டும்' என்று பரிகாசம் செய்தார்.

கலியாணி 'என்ன அண்ணா! இதற்குத்தான்கூப்பிட்டீர்களாக்கும்! மீனாட்சி கூப்பிடுகிறாள், நான் போகிறேன்' என்று புறப்பட, உடனே ஐயர் 'இந்தாடிகுட்டி நீ இராமனையும் கலியாணம் செய்து கொள்ளவேண்டாம், இலட்சுமணனையும் கலியாணம் செய்துகொள்ள வேண்டாம், அவர்கள் இருவர்களுக்கும் கலியாணம் ஆய்விட்டது. அதற்காக நீஏன்—' என்று சொல்லி முடிப்பதற்கு முன், 'முத்துஸாமி' 'முத்துஸாமி' என்று வாசல்கதவை யாரோ தட்ட, முத்துஸாமிஅய்யர் ராமண்ணா வாத்தியார் வந்திருக்கிறார், நீங்கள் உள்ளே போங்கள் என்று சொல்லிவிட்டு கதவைத்திறந்தார்.

(இன்னும் வரும்.)

பி. ஆர். சிவசுப்பிரமணிய அய்யர், பி.ஏ.

## சிறுவர்ககான ஜாலவினோதங்கள்.

—

### 7. கண்ணுக்குப்புலப்படா நாணயத்தைப் புலப்படச்செய்யும் வினோதம்.

ஓர் வெறுங் கோப்பையில் கால் அணாவைப் போட்டு அதை ஒரு மேசையின்மீது வைத்து மேசைக்கு சற்றுதூரத்தில் சென்று கோப்பையின் மேலோரம் கோப்பையிலிருக்கும் நாணயத்தை மாத்திரம் முழுமையும் மறைக்கிறதாகத் தோன்றும் அன்னிலையில் கண்ணை அசைவறநிறுத்தி எவனையாவது கோப்பையிலிருக்கும் அணாவைக் கிஞ்சிற்றும் அசைக்காமல் மெதுவாக ஜலம் வார்க்கச்செய்தால், கண்ணுக்கு முன் புலப்படாதிருந்த நாணயம் இப்பொழுது தோன்றும்.

### 8. டம்ப்ளரில் தோன்றும் மாய நாணயம்.

அலங்காரத்தின் பொருட்டு சுற்றி பட்டை பட்டையாய் வெட்டப்படாததும், சாதாரணமானதும் அடியைக்காட்டிலும் வாய்அகண்டுள்ளதுமான ஒரு வெள்ளைக்கண்ணாடி டம்ப்ளரில் பாதி சலம் வார்த்து அதில் ஒரு காலணாவைப்போட்டு, டம்பளரின் வாயை ஒரு அட்டையால் மூடி, ஜலம் கொட்டாதபடி ஜாக்கிரதையாய் அதைத்தலை கீழாகக்கவிழ்த்து மேஜையின்மேல் வைத்து டம்பளரின் மேற்பக்கமாய் அட்டையைப் பார்ப்போமாகில் அதில் நாம் வைத்த காலணாவும் அதுவுமன்றி அரை அணா அவ்வளவு பெரிதான இன்னொரு நாணயமும் பக்கத்திலிருப்பதாகத்தோன்றும். இவ்வேடிக்கையை நூதனமாய்க்கண்டவன் டம்ப்ளரில் தோன்றும் இரண்டுநாணயமும் நிசமானதென்றே முற்றும் உண்மையாய் நம்புவன். அவனுக்கு உண்மையைக் காண்பிக்க, பிரத்தியக்ஷமாய் கண்ணால்கண்டது ஆரோபமாய் இருந்து விட்டதே என்று ஓர் வித ஆச்சரியமும் சந்தோஷமுமடைவன்.

### 9. பிரபை காலலாரோபங்கள்.
(Illusions of Irradiation)

1. காலங்குலம் மத்தியரேகையுள்ள வட்டமான ஓர் கறுப்பு கடிதத்தை ஒரு விசாலமான வெள்ளைக் காகிதத்தின்மீதும், அதே அளவுள்ள ஓர் வெண்மையான கடிதத்தை ஒரு விசாலமான கறுப்புக்காகிதத்தின்மீதும் வைத்து, இரண்டு வட்டக்கடிதங்களையும் ஒரு நிலையினின்று பார்ப்போமானால் கருப்பு காகிதத்தின் மீதிருக்கும் வெண்மைக்கடித சக்கரம் மற்றதைவிட சற்று பெரிதாகத்தோன்றும்.

2. ஒரு குண்டூசியை வலது கண்ணிற்கு நேராக அருகாமையில் பிடித்து, இடது கண்ணை மூடிக்கொண்டு, கவனமாக 30-வினாடிநேரம் குண்டூசியின் தலை

யைப் பார்த்துக்கொண்டிருக்குங்கால், பக்கத்திலிருக்கும் ஓர் மேஜையின்மீது பரப்பின பச்சைநிற வஸ்திரத்தின்மீது வைத்த எவ்விதவஸ்துவும் மங்கலாய்த் தோன்றும். இப்பொழுது மூடின கண்ணைத் திறக்காமல் பச்சை வஸ்திரத்தின் மீதிருக்கும் வஸ்துவை நோக்கின் சில வினாடிநேரம் அது மாயமாய் மறைந்து விட்டாற்போல் தோன்றும். இவ்வண்ணமே குண்டூசியின் முனையைக் கவனமாய்ப் பார்த்துவிட்டு கறுப்புக்காகிதம் அல்லது கறுப்பு வஸ்திரத்தின் மேலிருக்கும் ஒரு வெண்மையான வஸ்துவைப் பார்த்தால் மேற்சொன்ன விதமாகத்தோற்றம் தோன்றும்.

நாம் ஒருவஸ்துவைப் பார்த்துக்கொண்டேயிருக்கும்பொழுது நம்மனம் அதிக ஆழமான ஆராய்ச்சியில் வீழ்ந்து விட்டால், நமது கண்கள் திறந்துகொண்டிருந்த போதிலும் எதிரிலிருக்கும் எப்பொருள்களும் நமக்குத் தோன்றாமற் போகிறது.

## 10. ஊசி அஸ்திரங்கள்.

ஒருகதவுக்கெதிரில் சற்றுதூரத்தில்நின்று அதின் பக்கமாய் ஒரு சாதாரண ஊசியை எடுத்து எறிய, அது கதவின் பலகையில் பட்டு அதில் குத்திக்கொள்ளாமல் கீழேவிழுந்து விடும்: ஆனால் ஊசியின் காதில் ஒருதுண்டு நூலைக்கோத்து எறிய தப்பாமல் மரத்தில் அம்புபோல் பாயும்.

## 11. சுலபமாய் எவரும் செய்துகொள்ளத் தக்க பூதக்கண்ணாடிகள்.

பிளர்டினம் (Platinum) என்னும் ஓர்விதஉலோகத்தால் செய்யப்பட்ட அதிக மெல்லிய கம்பியை ஒரு துடைப்பக்குச்சி கனமுள்ள இரும்பு அல்லது செம்பு கம்பியின்மேல் ஒரு சுற்றுசுற்றி அதைக் கம்பியினின்றும் கழட்டி அதில் அமைந்திருக்கும் சிறு மோதிர வடிவான சந்தில், சுத்தமான வெள்ளைக் கண்ணாடிப் பொடிகளை வைத்து அசையாமல்(spirit lamp) ஸ்பிரிட் என்னும் ஓர் திரவம் விட்டு எரியும் விளக்கில் அல்லது கொல்லன் உலையில் பிடிக்க கண்ணாடி உருகி கம்பியின் மோதிரத்தில் சிறு நீர்த்துளிபோல் திரட்சியாய் நின்றுவிடும்.

இதை உபயோகித்துப் பார்ப்பதற்கு ஒரு கண்ணாடித்துண்டில் கால்துளி ஜலம்விட்டு அதில் எறும்பு, கொசு முதலான சிறு ஜந்துக்களைவிட்டு, ஆகாயம் அல்லது விளக்கு பக்கமாய் பிடித்துக்கொண்டு அதற்கிப்பால் அரை நூல்தூரத்தில் மேற்செய்த பூதகண்ணாடியைப் பிடித்து அதின்மூலமாய்ப் பார்க்க ஜெந்துக்கள் அதிக பெரிதாய்த் தோன்றும்.

இன்னொருவிதம்.—அரைநூல் கனமுள்ள ஒரு இலேசான அச்சபித்தளைத்தகட்டில் குண்டூசி நுழையத்தக்க அவ்வளவு சிறுதுவாரம் செய்து, அத்துவாரத்தில் அசையாமல் ஒருதுளி ஜலம்விட அது உருண்டைவடிவாய் நின்றுவிடும். இந்தஜலபூதக்கண்ணாடியைப்பரீக்ஷிக்கமேற்சொன்ன விதமாய்கண்ணாடித்துண்டில் ஜலம்விட்டு அதில்கொசு முதலான சிறுஜெந்துக்களைப் போட்டுப் பார்க்கினும் பார்க்கலாம்; அல்லது, ஓர் துடைப்பத்தை அழுகினஜலத்தில் துவைத்தெடுக்க துடைப்பத்தின் முனையில் நிற்கும் ஜலத்துளியை இப்பூத கண்ணாடியின் மூலமாய் சற்று தூரத்திலிருக்கும் விளக்கின் பக்கமாய்ப் பார்க்க அழுகினநீரிலிருக்கும் எண்ணிறந்த அணுக்கிருமிகள் தோன்றும். துடைப்பத்திலிருக்கும் ஜலத்துளியை தகட்டுக்கு வெகு அருகாமையில் கொண்டுவரின் இதிலிருக்கும் நீர்த்துளியோடு அதுவுங் கலந்து தகட்டிலிருக்கும் நீர்த்துளியின் திரட்சியை அழித்து அப்பிரயோசனமாக்கிவிடும். ஆதலின் துடைப்பஜலத்துளியை வெகு சாக்கிரதையாய் ஜலப்பூதக் கண்ணாடியின் பின்னால் பிடித்திருக்க வேண்டியதவசியம்.

## 12. குண்டூசி ஆரோபம்.

நான்கு அங்குலம் சதுரமுள்ள ஒரு மெல்லிய காகித அட்டையில் ஊசித்துவாரம் செய்து, அவ்வட்டையை கண்ணிற்கு அரை அங்குலம் தூரத்தில் பிடித்துக்கொண்டு, கண்ணிற்கும் அட்டைத்துவாரத்திற்கும்மத்தியில் ஒருகுண்டூசியை நேராகப் பிடித்து துவாரத்தின் மூலமாக ஆகாயத்தைப்பார்ப்போமாயின் வெகு துலைதூரத்தில் ஆகாயத்தில் ஒரு பிர்மாண்டமான ஒரு குண்டூசி தலைகீழாக இருப்பதாய்த் தோன்றும்.

## 13. இருட்டறையில் பேய்கள் காண்பிக்க.

துப்பாக்கி மருந்தில் கொஞ்சம் பிசின் ஜலம் கலந்து இவற்றால் ஓர் இருட்டறையின் சுவரில் பயங்கரமான பிசாசு உருவத்தை எழுதி காய்ந்தபிறகு வேடிக்கை பார்ப்பவர்களை சுவரின் எதிரே தூரத்தில் நிற்கச்செய்து, நெருப்புக்குச்சியால் அவ்வுருவத்தின் கோடுகளில் எங்கேயாகிலும் பற்றவைக்க உருவமுழுதும் சடுதியில்பற்றி எதிரிலிருக்கும் ஜனங்களுக்கு ஷி உருவம் திடீலெனத் தோன்றி மறைந்துவிடும். இக்காட்சியைக் காண்பிக்க உருவம் எழுதுவதில் அதன் கோடுகளெல்லாம் ஒன்றோடொன்று கலக்கத்தக்கதாக எழுதவும்.

## 14. ஜால இங்கி.

1.—ஆக்ஸாலிக் திராவகத்தில் (Oxalic acid) ஆக்ஸைட் ஆப் கோபால்ட் (Oxide of cobalt) என்னும் மருந்தைக்கலக்கி அதில் கொஞ்சம் பொட்டிலுப்பைப் போட்டு இந்த இங்கியில் பேனாவைத் தோய்த்து எழுத எழுத்து ஒன்றும் தோன்றாது. ஆனால் எழுதினகாகிதத்தை அக்கினி அருகில் சூடு

படக் காண்பித்தால் எழுத்துகள் ரோஜாப்பூ வர்ணமாய்த்தோன்றும். ஆயினும் காகிதம் குளிரக் குளிர எழுத்து மறைந்துவிடும்.

2.—மயில் துத்தமும்,முயுரியேட் ஆப் அம்மோனியாவும் (Muriate of Ammonia) சமனிடை எடுத்து ஜலத்தில் கலக்கி எழுத, எழுத்து ஒன்றும் தெரியாது. ஆனல் எழுதின காகிதத்தை அக்கினி அருகில் சூடுபட காண்பிக்க அக்ஷரங்கள் மஞ்சள் வர்ணமாய்த் தோன்றும். ஆயினும் காகிதம் குளிரக் குளிர எழுத்து மறைந்துவிடும்.

3.—நைட்ரேட் ஆப் பிஸ்மத்தைச் (Nitrate of Bismuth) சலத்தில் கலக்கி எழுத எழுத்து உலர்கிறவரையிலும் தோன்றும், பின்பு மறைந்துவிடும். காகிதத்தைச் சலத்தில் துவைக்க எழுதின எழுத்துகள் மறுபடியும் தோன்றும்.

4.—பச்சை நிறமுடைய (Muriate of cobalt) முயுரியேட் ஆப் கோபால்டை ஜலத்தில் கலக்கி எழுத காகிதத்தில் ஒன்றும் தெரியாது. ஆனல் காகிதத்தை வெயிலில் அல்லது நெருப்பினெதிரில் சற்று சூடுண்டாகும்படி பிடிக்க மிகவும் பிரகாசமான பச்சைவர்ணமாய் எழுத்துகள் தோன்றும். காகிதம் குளிரக் குளிர எழுத்துகள் மறைந்துவிடும்.

5.—பிரஷியேட் ஆப் போட்டாஷ்(Prussiate of Potash) என்னும் மருந்தில் மூன்று கடுகளவினதாக எடுத்து ஜலத்தில் கரைத்து காகிதத்திலெழுத ஒன்றும் தெரியாது. ஆனல் சிறிது அன்னபேதி கரைத்திருக்கும் ஜலத்தை காகிதத்தின்மேல் தடவ எழுத்துக்கள் திடீரென நீலநிறத்தை உடையதாய்த் தோன்றும்.

6.—அன்னபேதி கரைத்த சலத்தால் காகிதத்திலெழுதி உலரவைக்க எழுத்துகள் ஒன்றும் தோன்ருது. ஆனல் கடுக்காய்க்கொட்டை ஊறின சலத்தைஅக்காகிதத்தின்மேல் தடவ,எழுத்துகள் திடீரெனக்கறுப்பு வர்ணமுடையதாய்த் தோன்றும்.

7.—மயில்துத்தம் கரைத்தசலத்தால் காகிதத்தில் எழுத, எழுத்துகளொன்றும் தோன்ரு. ஆனல் அம்மோனியா (ammonia)என்னும் திராவகத்தை மேல் தடவ, எழுதின எழுத்துக்கள் நீலநிறமுடையதாய்த் தோன்றிக் கொஞ்சநேரத்திற்குப் பின்பு மறைந்துவிடும். மறுபடியும் திராவகத்தைத் தடவ மறுபடியும் தோன்றும்.

8. அதிகம் நீர்கலந்த கந்தகதிராவகத்தால் காகிதத்திலெழுத ஒன்றும் தெரியாது. எழுதின காகிதத்தை அக்கினி எதிரில்பிடிக்க எழுத்துகள் கறுப்பு நிறமாய்த் தோன்றும்.

9.—சாதாரணக் கஞ்சிநீரில் பேனவைத் தோய்த்தெழுத, எழுத்து ஒன்றும் தெரியாது. ஆனல் ஒரு புட்டி சலத்தில் ஐந்தாறுதுளி டிங்சர் ஆப் அயோடின் (Tincture of Iodine)என்னும் திராவகம்விட்டு இதில் ஷை காகிதத்தை துவைத்தெடுக்க எழுத்துகள் நீலவர்ணமாய்த் தோன்றும்.

10.—வெங்காயம் வெள்ளைப்பூண்டு இவைகளில் யாதாவதொன்றைக் கசக்கிப் பிழிந்து அச்சாற்றில் பேனவைத் தொட்டு எழுத எழுத்துகளொன்றும் தோன்ரு. ஆனல் ஒரு காகிதத்தைக் கொளுத்தி அதின் கரியை ஷை காகிதத்தின்மேல் தேய்க்க, எழுதின எழுத்து கருப்பிங்கியி லெழுதினுப்போல் தோன்றும்.

### 15. வெள்ளிசெடி உண்டாக்க.

ஒருபெரிய புட்டியில் முக்காலளவு சுத்தநீர் (மழைஜலம்மிகவும்நன்று) வார்த்து அதில்எவ்வளவு கரையுமோஅவ்வளவு ஸில்வர் நைட்ரேட் (Silver nitrate) அல்லது லெட் ஆஸிடேட் (Lead acetate) மருந்தை போட்டு அப்புட்டிக்கு நடுவில் சலத்தில் ஒரு துத்திநாகத் துண்டை கயிற்ருல் கட்டி தொங்கவிட்டு அசையாமல் ஓரிடத்தில்வைத்து பன்னிரண்டு மணிநேரம் பொறுத்து பின்பு பார்க்க, துத்திநாகத்தின்மேல் வெள்ளிக்கொடிகள் படர்ந்திருப்பது போல் தோன்றும்.

### 16. பொட்டாஷியம் என்னும் உலோகத்தின் குணங்கள்.

இந்த உலோகம் வெள்ளியைக் காட்டிலும் அதிக பிரகாசமாயும், ஈயத்தைப்போல மெதுவாயும், சடையைப்போல் நீரில் மிதக்கக்கூடிய அவ்வளவு இலேசாயுமுள்ளது. இது ஸர் ஹம்ப்ரிடேவிஸ் (Sir Humphry Davis) என்னும் ஓர் சாஸ்திரியாரால் கண்டுபிடிக்கப்பட்டது. சலம்பட்டால் இவ்வுலோகம் பற்றிக்கொள்ளும். அணிவால் தூரிகையை வெறுஞ்சலத்தில் தோய்த்து ஒரு காகிதத்தில் எழுத்து படம் முதலானவைகளை தொடர்ச்சி கோடுடையதாய் வரைந்து அக்கோடுகளில் எங்கேயாவது ஒரு துண்டு ஷை உலோகத்தை வைக்க காகிதத்தின் மேலுள்ள நீர்க்கோட்டின் மூலமாய் உலோகம் எறிந்து கொண்டே ஓடும். உலோகத்தை ஒருகனத்த ஐஸ் (Ice) அதாவது நீர்க்கட்டியின்மேல் வைக்க அது உடனேபற்றிக்கொண்டு, நீர்க்கட்டியினுள் ஊடுருவிச் செல்லும். நீருக்கும் இவ்வுலோகத்துக்கும் இவ்வித சம்பந்தங்களிருப்பதால், உலோகத்தை (Naphtha) நாப்தாஎன்னும்எண்ணெயில் விட்டுவைக்கவேண்டும்.

### 17. இருப்புக்கு செப்பு கிலிட்டிட.

மயில்துத்தம் கரைத்த ஜலத்தில் பளிங்குபோல் சுத்தமாய்த் துலக்கிய இருப்பு சாமானைப்போட்டு, கொஞ்சநேரம்பொறுத்து எடுத்துப்பார்க்க, இரும்பின் மேற்புறமெல்லாம் செம்பு மூலாம் பூசினதுபோலிருக்கும்.

### 18. சூட்டினுல் உலோகங்கள்விரியும்.

ஒரு மோதிரத்தில் சந்தின்றி சரியாய் புகக்கூடிய ஒரு இருப்புக் கம்பியை எடுத்து நெருப்பில் செந்நிறமாய் காயவைத்து மோதிரத்துள் நுழைக்க கம்பி மோதிரத்தினுள் நுழையவே நுழையாது. இவ்வுண்மை சக்கரங்களுக்கு கட்டுபோடும் தொழிலாளிகளுக்கு நன்ருய்த் தெரிந்த விஷயம்.

(இன்னும் வரும்.)

மா. நடேசன்,

# சிறுவர்க்கான பக்கம்.

[விவேக சிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

எனது சின்னஞ்சிறு நேசர்களே!

இந்தவிசை குட்டியண்ணாவுக்கு உங்களோடு வந்து ஊடாடி உறவாடிச்சல்லாபிக்கக் கூடாத அசௌகரியங்கள் சிலநேர்ந்திருக்கின்றன. அவைகளைப்பற்றி உங்களுக்குச்சொல்ல அவர் எனக்கு அனுமதி கொடுக்கவில்லை. அவர் வரவை எதிர்பார்த்து நீங்கள் ஏங்கி நிற்காதிருக்கும்படி இது சங்கதியைமட்டும் உங்களுக்குத் தெரிவித்தேன். நமது தாதாவும் ஏதோவரக்காணோம். ஆனாலும் சிறுவர்க்கான பக்கம் சொத்தையாகப்போகவில்லை. உங்களுக்குச் சந்தோஷமூட்ட நமது நேசர் "மா. நடேசன்" என்பவர் வேடிக்கையும் விளையாட்டுமான பல ஜாலவினோதங்களை யெடுத்துத் திரட்டி யாருக்கும் தெளிவாகத் தெரியும்படிசொல்லி வருகிறார். நமது பக்கத்தில் அவ்வளவுக்கும் போதுமானஇடம் காண்பது அரிதானதுபற்றி விவேகசிந்தாமணி ஆசிரியர் அவற்றை நமது பக்கத்துக்கு முன்னிட்டுப் பிரசுரித்துவருகிறார். இடமிருந்தால் அவற்றை நமது பக்கத்திலேயே பதிப்பிக்கலாம். ஆனால் எங்கிருந்தால் என்ன? நமது பக்கத்தை ஒழுங்காக வாசித்துவரும் சிறுவர்களெல்லாம் சிறுவர்க்கான பக்கங்களைத் தவிர விவேகசிந்தாமணியின் மற்றவிடங்களிலிருக்கும் விஷயங்களிலும் அவர்கள் வாசிப்பதற் கினிமையானவற்றைத் தேடிப்பார்த்து வாசித்துவரக் கற்றுக்கொண் டிருப்பார்களென்று நம்புகிறேன். சிறுவர்க்கான ஜாலவிநோதங்கள் வெறும் விளையாட்டுக் குபயோகமானவையாகத் தோன்றினபோதிலும் அவற்றில் எவ்வளவோ மேலான சாஸ்திர உண்மைகள் பொதிந்திருக்கின்றன. அவற்றைக் கவனமாய் இப்பொழுதுவாசித்துவந்தீர்களானால் பின்னால் சாஸ்திரசம்பந்தமான விஷயங்களைப்பற்றி விஸ்தாரமாய்ப்பேச நேரிடும்பொழுது இப்பொழுது ஜாலமாய்த் தோன்றும் அநேகவித்தைகள் பின்னிற்குச் சாதாரணமான சாஸ்திர உண்மைகளாகத்தோன்றும். ஆகையால், அவற்றைக்கவனித்துவாசித்து, கூடுமானவரையில் அவர் சொல்லும் வித்தைகளைச் செய்துபார்த்தும் வருவீர்களென்று எண்ணுகிறேன். அவற்றில் குறித்த திராவகங்கள் முதலிய ரசாயன வஸ்துக்கள் அபூர்வமானவை யேதாகிலும் வேண்டுமானால் சொற்பவிலைக்கு இங்கிலீஷ் மருந்துக் கடைகளில் வாங்கிக்கொள்ளலாம்.

நான் சிறுவர்க் குபயோகமான புஸ்தகங்கள் பத்திரிகைகளை வாசித்து வருகையில் உங்களுக் குபயோகமானதாகப் படும் பலவிஷயங்களை அப்போதப்போது அடையாளம் செய்து குறித்து வைத்துக்கொள்வது வழக்கம். அப்படி குறித்துவைத்துள்ள விஷயங்களில் சிலவற்றை இந்த முறை உங்களுக்கு வாசிக்கக் கொடுக்கிறேன். அவ்விஷயங்களை வாசித்து அததிலிருந் தறியும் முக்கியமான பாடங்களை மனதில் வைத்து நடந்துவருவீர்களென்று நம்புகிறேன். முதலாவது நீங்கள் வாசிக்கப்போகிறது முறுமுறுப்புக்காரர்களைப்பற்றி. அவர்கள் யார், எப்பேர்ப்பட்டவர், அப்படிப்பட்டவர்களா யிருப்பது நல்லதா, கெடுதலா, என்னும் கேள்விகளுக்கெல்லாம் விவரம் கீழே காண்பீர்கள். ஆகையால், பின் வருவதைக் கவனமாய் வாசித்துப் பாருங்கள்:—

### முறுமுறுப்புக்காரர்.

முறுமுறுப்புக்காரர் என்னும் ஒருவகை ஜனங்கள் நமக்குள் இருக்கிறார்கள் என்று உங்களுக்குத் தெரியுமா? அவர்கள் எதாயினும் ஒரு காரியத்தைக் குறித்து எப்போதும் குற்றம்பிடித்து, ஒருக்காலும் திர்ப்தியடையாத ஒருவகை கூட்டமா யிருக்கிறார்கள். சூரியன் உஷ்ணமாயிருந்தால், அவர்கள் அதிக உஷ்ணமாயிருக்கிறது என்கிறார்கள்; குளிர்ந்திருந்தால், அதிக குளிர்ச்சியாயிருக்கிறது என்கிறார்கள். அவர்கள் எப்பொழுதும் சகல ஜனங்களிடத்திலும், ச[illegible] காரியங்களிடத்திலும் குற்றம்கண்டுபிடித்துக்கொண்டே யிருக்கிறார்கள். இது அவர்களிடத்தில் ஒரு வழக்கமாகி விடுகிறது. இது மெய்யாகவே கெட்ட வழக்கமாயிருக்கிறது.

நாம் இப்படிக்கொத்த ஜனங்களைக் குறித்துப் பரிதாபப்படுவதுமன்றி, இவர்களுடைய வல்லமைக்குக் கீழ்ப்பட்டிருப்பவர்களையும் குறித்து மிகவும் பரிதாபப்படுகிறோம். எதிலும் பிரியப்படாதவன் முறுமுறுப்புக்காரன் ஆவான் என்பதற்குச் சந்தேகமில்லை. இப்படிப்பட்ட முறு முறுப்புக்காரர் இருக்கும் வீடு மிகவும் நிர்ப்பாக்கியமான வீடாய் இருக்கும் என்பதற்கும் சந்தேகமில்லை.

காலை துவக்கி மாலைமட்டும் எந்தக் காரியமும் இவர்களுட[illegible] சரியாய் நடந்தேறுகிறதில்லை. இவர்களால் இவர்களுடைய பிள்ளைகளும் நிர்ப்பாக்கியராகிறார்கள்; சகோதரரும் சகோதரிகளும் இவர்களைவிட்டு ஓட்டம்பிடிக்கிறார்கள். புருஷன் முறுமுறுப்புக்காரனாயிருந்தால், ஏழை மனைவிக்குக் கிடைக்கும் திட்டுக்குக்குறைவில்லை. அப்படியே மனைவி முறுமுறுப்புக்காரியாயிருந்தால், நாம் புருஷனுக்காகவும் பரிதாபப்படவேண்டியவர்களா யிருக்கிறோம். ஆனால்வீட்டுக்குப் பெரிய மனுஷியாயிருக்கும் மாமியார் முறுமுறுப்புக்காரியா யிருந்தாலோ எந்தக் காரியமும் சரியாய் நடந்தேறாது. இப்படிக்கொத்த பழக்கத்தில் நாம்விழாதிருக்கக் கவலையுள்ளவர்களாய் இருப்போமாக. அது நம்மில் நாளுக்குநாள் அதிகரித்து முதிர் வயதில் அதிக கேவலமாகிவிடும்.

குற்றம் கண்டுபிடிக்க வேண்டுமென்று விரும்புகிறவர்கள் ஏதாகிலும் குறைசொல்லி மற்றவர்களுடைய வேலையை அதிகபாரமாக்கலாம். நமதுஜீவனைப் பாக்கியமும் சந்தோஷமுமுள்ளதாக்க நாம்கவலையாயிருக்கவேண்டியது. குற்றத்தைக் கண்டிப்பது நியாயமே. ஆனால் அதை நல்லதனமாக முறுமுறுப்பில்லாமல் செய்யவேண்டியது.

குற்றம் கண்டுபிடிப்பதில் வெகுவாய்ப் பழகிவிட்ட அநேகர், எந்தக் காரியமும் பூரணமாயிருந்து குற்றம் மருந்துக்கும் கிடைக்காத மோட்சத்தில்கூட பாக்கியவான்களாயிருப்பது அரிது என்று ஒருகதையில் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்தத் துர்க்குணம் ஏதாவது நமது இருதயத்தில் ஒட்டிக்கொண்டிருந்தால், அதை உடனே அகற்றிவிடப் பிரயாசைப் படுவோமாக. வீட்டிலும் வெளியிலும் திருப்தியுள்ளவர்களாய் நடந்து சமாதானமும் ஐக்கியமும் நிறைந்து இகத்தில் சந்தோஷமும் பரத்தில் சுகமும் அனுபவிக்கத் தகுதியுள்ளவர்களாயிருக்கப் பிரயாசைப்படுவோமாக.

ஆயிற்று. இரண்டாவது, 'நங்கையர்க்கு நல்லுரை'யென்று ஒருபெண்மணி ஸ்திரீகள்ஒழுங்காயிருக்கவேண்டியதைப்பற்றிச் சொன்ன புத்திமதிகளைக் கேளுங்கள். எழுதியவள் பெண்பாலாதலால் அவள் பெண்களைமட்டும் குறித்து எழுதியிருக்கிறார்கள். ஒழுங்கு புருஷர்களுக்கும் அவசியமாயிருக்கவேண்டியதாதலால் என் சிறுதோழர்களே! உங்கள் நங்கையர்க்குச்சொல்லியது உங்களுக்கும் சொன்னதுபோலவேயென்று எண்ணி, நீங்களும் எல்லா விஷயங்களிலும் ஒழுங்குள்ளவர்களாக விருந்து நடந்துகொள்வீர்களென்று நம்புகிறேன். ஸ்திரீகள் ஒழுங்கா யிருக்கவேண்டியதைப்பற்றி ஒரு பெண்மணி சொல்லிய நல்லுரைகளைக்கேளுங்கள்.

### ஒழுங்கு.

ஒரு ஸ்திரீயின் குடித்தனம் சிறந்த குடித்தனமாயிருக்க வேண்டுமானால், ஒழுங்கிருக்க வேண்டியது அவசியம். "ஒவ்வொரு பொருளுக்கும் ஒவ்வொரு ஸ்தானமுண்டு" என்பது ஒழுங்கைக் குறிக்கும் ஒரு நல்ல பழமொழி. ஒவ்வொரு பொருளையும் அதனதனிடத்தில்வைத்து, அந்தந்தப் பொருளை அதனதன் வேலைக்கு உபயோகிப்பது நல்லொழுங்கு. சில ஸ்திரீகளின்வீட்டில் பெட்டி இருக்கும் இடத்திலே சட்டியையும், சட்டி இருக்கும் இடத்திலே பெட்டியையும், அடுப்பு இருக்கும் இடத்திலே உடுப்பையும், உடுப்பு இருக்கும் இடத்திலே அடுப்பையும் பார்க்கலாம். நாம் இருக்கும் வீடு சிறு வீடாயிருந்தாலும், நமக்குள்ளவைகளை ஒழுங்காய் வைத்திருப்பது கூடாத காரியமல்ல. ஒழுங்கீனமான குடித்தனம் உள்ளதையெல்லாம் கொள்ளையாக்கும் பிள்ளைத்தனம் என்றே சொல்லப்படவேண்டியது. கடவுள் நமக்குக் கிருபையாய்க் கட்டளையிட்டிருக்கும் எல்லாக்காரியங்களிலும் நாம்ஒழுக்கம் உடையவர்களாயிருக்க வேண்டுமென்பதே அவருடைய உள்ளக்கனிவான விருப்பம். மேலும், நாம் நமது வேலையைச் செய்யும்போது, பல வேலைகளையும் ஒரே சமயத்தில் செய்யத்தொடங்கி, அவைகளை அரைகுறையாய் விட்டுவிடாமல், அந்தந்த வேலையை அதனதன் சமயத்தில் செய்தால், நாம் எப்போதும் எக்காரியத்திலும் ஒழுங்கும் சித்தியும் உடையவர்களாயிருப்போம். நமது உடையிலும் சரி, நடையிலும் சரி, வீட்டிலும் சரி, வெளியிலும் சரி, கொடுக்கலிலும் சரி, வாங்கலிலும் சரி, பேச்சிலும் சரி, செய்கையிலும் சரி, ஒழுங்குள்ளவர்களா யிருப்பதே நம்மை முன்னுக்குக் கொண்டுவரும் முந்தின காரியம். சிலர் பேசுவது ஒன்றும், செய்வது ஒன்றுமாய் இருக்கும். வெளிக்கு மித்துருக்களாயிருந்து உள்ளேயோ சத்துருக்களா யிருக்கும் ஒழுங்கீன மனிதரும் அநேகர் உண்டு. நாம் ஒன்றைச் செய்வோமென்று சொன்னால், அதை எப்படியாயினும் செய்யவேண்டியது நமது கடமை. நமது நடக்கை ஒழுங்கா யிருப்பதே எல்லா ஒழுக்கத்திலும் சிறந்த ஒழுக்கம். அது மனிதருக்கு மாத்திரமல்ல, தேவனுக்கும் பிரியமாயிருக்கும். எந்தக் காரியத்தையும் ஒழுங்கோடு செய்யும் குடித்தனக்காரி குறைவற்றகுடித்தனக்காரியா யிருப்பாள் என்பதற்குச் சந்தேகமில்லை. அவளுக்கு எந்தக் காரியத்தை எந்த இடத்திலே எப்படி கண்டுபிடிக்கவேண்டுமென்று தெரியும். அவள் பேச்சும் அதற்கேற்றதுபோல் அவள் நடக்கையும் ஒழுங்காயிருப்பதால், பூலோகத்தார் அவளைப் புண்ணியவதி யென்றும், பரலோகத்தார் அவளைப் பாக்கியவதி யென்றும் அழைப்பார்கள். இப்படிப்பட்ட பெண்கள் நமது தேசத்தில் தினந்தோறும் அதிகரித்து வந்தால் நலமாயிருக்கும். நங்கையரே, நீங்கள் எதைச்செய்தாலும் ஒழுங்கோடு செய்யப் பிரயாசைப்படுகிறீர்களா? நம்மை உண்டாக்கின கடவுள் ஒழுங்கை விரும்பி, ஒழுங்கீனத்தைப் பகைக்கும்கடவுளாயிருக்கிறபடியால், அவரை உங்களுடைய கோணலும் தாறுமாறுமான வழிகளால் கோபப்படுத்தாமல், நேரானவழிகளால் பிரியப்படுத்தப்பிரயாசைப் படுங்கள்.

அன்பின்வல்லபத்தைப் பற்றி ஒரு நண்பர் எழுதியிருப்பதைக் கீழே பதிப்பிக்கிறேன். அதைக் கவனமாய் வாசித்துப் பாருங்கள்:—

### அன்பின்வல்லபம்.

"அநேக ஜனங்கள் அன்பினால் மாத்திரம் ஏவப்பட்டு வெகுவான காரியங்களைச் செய்து வருகிறார்கள். இதற்கு எண்ணிறந்த திருஷ்டாந்தங்களை இந்துதேச சரித்திரத்தில் காணலாம்.

ஒவ்வொரு ஸ்திரீயும் தான் வெகுவாய் நேசிக்கும் பிள்ளைக்குக் காட்டும் அன்பு இப்படிப்பட்டதென்று அனுபோகத்தால் அறிந்திருக்கிறாள். விசேஷமாய் ஒருபிள்ளை வியாதியாயிருக்கும்போது, தாயானவள் காட்டும் அன்பு அளவிடப்படக் கூடாததா யிருக்கிறது.

அன்பிற்கு வேறொரு வல்லமையும் உண்டு. "அன்பு அன்பைப் பிறப்பிக்கும்" என்பது ஒரு முதுமொழி. ஒருவன் மெய்யாகவே நம்மை நேசிப்பதை நாம் காணுவோமாகில், அவன் செய்யும் சிறு பிழைகளையும் அடிக்கடி மன்னித்து விடுகிறோம்; அதே பிழைகளை வேறொருவன்செய்வானாகில், நாம் மன்னிக்க மாட்டோம். இப்படியாக நமது அன்பு நாளுக்குநாள் அதிகமாக விர்த்தித்துக் கொண்டே வந்து கடைசியாக அது எளிதில் பிரிக்கப்படக் கூடாத அன்பாகி விடுகிறது. இதனால் நாம் ஒரு சிறந்த பாடத்தைக்கற்றுக்கொள்ளலாம். நமது வீட்டிலாவது குடும்பத்திலாவது அன்பற்ற யாராகிலும் இருந்தால், அவர்களை நாம் நேசிப்பதால், அவர்கள் குணத்தை மாற்றப் பிரயாசைப்படக் கடவோம். தீமைக்குப் பதில் தீமையைச் செய்யாமல், பட்சமற்ற வார்த்தைகளுக்குப் பதிலாய் அன்பான வார்த்தைகளையும், பிறரைக்குறித்து அசட்டையாயிராமல் அவர்களுக்காகக் கவலைப்படுகிறவர்களாயு மிருக்கக்கடவோம். இது வெகு வருத்தமான விஷயம் என்று எவரும் எண்ணிக்கொள்ள வேண்டாம். ஏனெனில் இதிலே ஒவ்வொருவருடைய சுயபாக்கியமும் பூரணமாய் இருக்கிறது.

ஒருதேசத்திலே ஒரு அரசன் இருந்தான். அவன் தனது குமாரனை வெகுவாய் நேசித்து, அவனுக்கு வேண்டியவற்றை யெல்லாம் திரளாய்க் கொடுத்து வந்தான். ஆகிலும் அந்த இளவரசன் எப்போதும் பாக்கியமற்றவனாகவே இருந்தான். தனக்குஇல்லாத ஏதோ ஒருநூதன காரியத்தையே அவன் எப்போதும் விரும்பினவனாகக் காணப்பட்டான். ஒரு நாள் ஒருமந்திரவாதி அரண்மனைக்கு வந்து, இளவரசனைப் பாக்கியமுள்ளவனாக மாற்றுவேன் என்றான். அரசன் அதற்குச் சம்மதித்து, மந்திரவாதி கேட்கும் எதையும் தருவதாக வாக்களித்தான். மந்திரவாதி ஒரு காகிதத்தில் ஒரு வெண் வஸ்துவைக் கொண்டு சில வார்த்தைகளை எழுதி, விளக்கின்மேல் பிடித்து வாசிக்கச் சொன்னான். அப்பொழுது, அந்த வெள்ளை எழுத்துக்கள் எல்லாம் அழகான நீல எழுத்துக்களாக மாறி, 'தினந்தோறும் எவனுக்காகிலும் அன்பான செய்கை ஒன்றைச் செய்து வா" என்று தோன்றின. இராசகுமாரன் இந்த இரகசியத்தின்படியே செய்து, இராச்சியத்திலுள்ள பாக்கியம் நிறைந்த ஒருபயன் ஆனான்.

இது ஒரு கதையாய் மாத்திரம் இருந்தபோதிலும் பெரிய உண்மையை வெளிப்படுத்துகிறது, நம்மை யாருக்காக மனதார ஒப்புக்கொடுப்போ[illegible] களை எப்போதும் அதிகமாய் நேசிப்போம்[illegible] தில் இது சற்றுக் கடினமாயிருந்தபோதிலும் தின[illegible] தோறும் அதனால் நமக்கு அதிகநன்மை கிடைக்கும். நாம் யாரை நேசிக்கிறோமோ அவர்கள் எப்படிப்பட்டவர்களாயிருந்தபோதிலும், நம்மை நேசிக்க ஏவப்படுவார்கள்."

என் சின்னஞ் சிறு நேசர்களே! அன்பின் வல்லபத்தைக் காட்ட மேலேசொல்லிய கதையில் "மந்திரவாதி ஒருகாகிதத்தில் ஒரு வெண் வஸ்துவைக்கொண்டு சில வார்த்தைகளை யெழுதி விளக்கின்மேல் பிடித்து வாசிக்கச் சொன்னான். அப்பொழுது அந்த வெள்ளை எழுத்துக்களெல்லாம் அழகான நீல எழுத்துக்களாக மாறி"த் தோன்றினவென்று படித்தீர்களே; அந்த மந்திரவாதி செய்த சூக்ஷ்மம் இன்னதென்று உங்களில் யாருக்காவது தெரிந்ததோ? விவேகசிந்தாமணியைக் கவனமாய் வாசித்து வரும் விவேகமுள்ள சிறுவர் யாரும் இதன் சூக்ஷ்மத்தை யறிந்துசொல்லத் தக்கவர்களாக விருப்பார்கள். விவேகசிந்தாமணியை வாங்கி வாசிக்கும் சிறுவர்களில் இந்தச் சூக்ஷ்மத்தை யறிந்து தபால் மூலமாக முதல் முதல் தெரிவிக்கும் சிறுவர்க்கு மாதர்நீதியென்னும் புஸ்தகமாவது, விஜய வருஷத்து ரிப்பன் பாக்கெட் பஞ்சாங்கமாவது வருணாந்தீர்த்த நேர்த்தியான மஹாராணியின் குடும்ப படமாவது இனாமளிக்கப்படும். தபாற்கூலி கட்டுக்கூலிச் செலவு பரிசுபெற்றவர்கள் கொடுத்து வருவித்துக்கொள்ளவேண்டும். இப்பரிசுபெறப் போட்டிபோடும் சிறுவர் ஆணானால் 12-வயதுக்கு மேற்படாமலும் பெண்ணானால் 14-வயதிற்கு மேற்படாமலு மிருக்கவேண்டும். சிறுவர்கள் தங்கள் பெற்றோர் மூலமாகவாவது, தங்கள் வாத்தியார் மூலமாகவாவது எழுதிஅனுப்பவேண்டும். எழுதும்போது அவர்கள் பேர் ஊர் வயது விவரங்கள் காணப்பட்டிருப்பதோடு இந்தச் சூக்ஷ்மத்தை அச்சிறுவர் பிறருதவியின்றிச் சுயமாகக் கண்டுபிடித்ததாகப்பெற்றோர் கைப்படவாவது வாத்தியார் கைப்படவாவது உறுதிமொழிவாங்கி அனுப்பவேண்டும். இப்பரிசுபெறப் போட்டி போடுகிறவர்கள் தாங்களேயாவது தங்கள்பெற்றோர் மூலமாயாவது விவேகசிந்தாமணி வாங்குகிறவர்களாக விருக்கவேண்டும். இதற்கு பதிலெழுதுவோர் "திருவல்லிக்கேணி, விவேகசிந்தாமணி ஆபீசில், மாயாண்டிக்கு" என்று விலாசமெழுதியனுப்பவேண்டும்.

மாயாண்டி.

## விசேஷகுறிப்புகள்.

**நமதுபத்திரிகைக்கு உதவி**

ஸ்ரீலஸ்ரீ ராய்பஹதூர் மதுரை திருஞானசம்பந்தமூர்த்தி பண்டாரசந்நிதியவர்கள் நமது பத்திரிகை மிக உபயோகமுள்ளதாயிருக்கிறதென்பதை யுணர்ந்து அதை விர்த்தி செய்துமுன்னுக்குக் கொண்டுவரவேண்டுமென்றுநமக்கு உற்சாகமூட்டியெழுதி அதன் அபிவிர்த்திக்காக 20-ரூபாய் நன்கொடை யளிக்கவும் மனமுவந்ததை அங்கீகரித்து, வந்தனத்துடன் அவர்உதவிபுரிந்ததை ஒப்புக்கொள்கிறோம். ம-ா-ா-ஸ்ரீ திவான் பகதூர் எஸ். சுப்பிரமணிய அய்யர் ஸி. ஐ. இ. அவர்களும் நமது பத்திரிகையின் உபயோகத்தை நன்குணர்ந்து அது எங்கும் பரவி விர்த்தியடையத் தம்மாலியன்ற உதவி செய்வதாக வாக்களித்ததோடு 20-ரூபாய் திரவியசகாயமும்செய்து ஆதரவுபுரிந்ததை அதிவிநய வந்தனத்தோடு அங்கீகரித் தேற்றுக்கொண்டு வெளியிடுகிறோம். மற்ற செல்வவான்களும், ராஜாக்கள், மடாதிபதிகள், ஜமீன்தாரர்களும் இவ்விஷயத்தில் நமக்கு வேண்டுமுதவிசெய்து இப்பத்திரிகை என்றென்றைக்கும் நிலைவரமாய் நின்றுதவி வரும்படி கைகொடுத் தாதரிப்பார்களென்று அவர்களெல்லார்க்கும் விநயபூர்வமாய் விண்ணப்பம் செய்துகொள்கிறோம்.

---

**சட்டநிரூபணசபைகள்சீர்திருத்தம்**

1892-வது வருஷத்தில் பார்லிமெந்து சபையார் சட்டமாகச்செய்த இந்தியன் கௌன்ஸில்ஸ் ஆக்ட்டு நிபந்தனைகளின்படி இந்தியாவிலுள்ள சட்ட நிரூபண சபைகளைப் பெரிதாக்கி, அவைகளுக்கு ஜனப்பிரதிநிதிகள் நியமிக்கப்பட ஏற்பாடுசெய்து அச்சபை மெம்பர்களின் அதிகாரங்களையும் அதிகப்படுத்த கவர்ன்மெண்டார் இந்தியா மந்திரியோடு சேர்ந்து யோசித்து விதிகள் தயார்செய்து வருகிறார்களென்று போனமாசத்திலே சொன்னோம். சட்டநிரூபண சபைகளைப் பெரிதாக்கி அவைகளுக்கு ஜனப்பிரதிநிதிகள் நியமிக்கப்படுவதற்கான ஏற்பாடுகள் செய்ய சட்ட சம்பந்தமான இடையூறுகள் ஏதோ நேரிட்டிருக்கின்றனவென்று சொல்லி இந்தியா மந்திரியவர்கள் அவ்வகைச் சீர்திருத்த சம்மந்தமாய் விதிகள் செய்வதைக் கொஞ்சகாலத்திற்குத் தள்ளிவைத்துக்கொண்டிருக்கிறார். சட்டநிரூபண சபைகளின் தொழில்களை விசாரிக்கச்செய்து அச்சபை மெம்பர்களுக்குகவர்ன்மெண்டாரைக் கேள்விகள்கேட்கவும், வரவு செலவு திட்டக்கணக்கு விவரங்களைப்பற்றித் தர்க்கம் செய்யவும் அதிகாரங்கள் கொடுத்து அவ்வதிகாரங்களை அவர்கள் செலுத்தி வருவதற்காகச் சில விதிவிலக்குகள் செய்திருக்கிறார்கள். அவை ஏறத்தாழ எல்லாசட்டநிரூபண சபைகளுக்கும் ஒரேவிதமானவையாக இருக்கின்றன, நமது இராஜதானி சட்டநிரூபணசபை சம்மந்தமாய்ச் செய்யப்பட்டவிதிவிலக்குகளைமட்டும் அடுத்த சஞ்சிகையில் எடுத்துரைப்போம்.

---

**சுதேச கலெக்டர்கள்**

லார்ட் டப்பிரின் இராஜப்பிரதிநிதியாகவிருக்கையில் கவர்ன்மெண்டார் உத்தியோக நியமன விஷயமாய் நியமித்த (கமிஷன்) சபையார் செய்த ரிபோர்ட்டின்மேல் இந்தியாமந்திரியவர்கள் செய்திருக்கும் உத்திரவை யனுசரித்து 'இவ்விராஜதானியில் சுதேசிகளுக்கு இதுவரையில் கொடுக்கப்படாத உயர்ந்த உத்தியோகங்கள் அளிக்கக் கவர்ன்மெண்டார் உத்தேசிக்கிறார்களென்று தெரியவருகிறது. இவ்வுத்தேசப்படி சுதேசிகள் இரண்டொருவருக்கு ஜில்லா கலெக்டர் வேலை கொடுக்கப்படுமென்று அறிகிறோம், அப்படி கலெக்டர் வேலை கொடுக்கப் பெறத் தக்கவர்களில் ரிஜிஸ்திரேஷன் இலாகாத் தலைவராகவிருக்கும் ம-ா-ா-ஸ்ரீ திவான் பஹதூர் எஸ். ஸ்ரீனிவாச ராகவய்யங்கார் அவர்கள் ஒருவரென்று சொல்லப்படுகிறது.

---

**பெங்கால்ஜூரி கமிஷன்**

பெங்காளத்தில் ஜூரி விசாரணை யேற்பாட்டு விஷயமாய் அவ்விராஜதானி கவர்ன்மெண்டார் பிறப்பித்த உத்திரவு காரணமாய் உண்டான அமளிகுமளி இன்னும் முற்றும் அடங்கவில்லை. இந்தியா மந்திரியவர்கள் அவ்வுத்திரவை ரத்து செய்து விடவேண்டுமென்று உத்திரவு செய்ததாக வதந்தி பிறந்தும் அப்படிப்பட்ட உத்திரவு ஒன்றும்வெளிவரவில்லை. இப்பொழுது இந்தியா மந்திரியவர்கள் பெங்கால் உதவிக்கவர்னர் ஸர். சார்ல்ஸ் எலியட் செய்த பிரேரேபணையை இந்தியா கவர்ன்மெண்டார் சிபார்சு செய்ததின்பேரிலங்கீகரித்து, அவர் சொல்லியபடி ஜூரிவிசாரணை யேற்பாட்டை உண்மையாகச் சீர்திருத்துவதற்கான வழி வகைகளையெடுத்துக் காட்டுவதற்காக அது விஷயத்தைப் பற்றி விசாரித்து ரிபோர்ட்டுசெய்ய ஒரு 'கமிஷன்' ஏற்படுத்த உத்திரவு செய்திருக்கிறார். அவ்வுத்திரவுப்படி 5-பேர்களடங்கிய சபையொன்று நியமித்திருக்கிறார்கள். இந்தியா மந்திரியின் உத்திரவுப்படி நியமிக்கப்பட்டிருக்கும் சபைக்கு கல்கத்தா ஹைகோர்ட்டுஜட்ஜ் மிஸ்டர் ஜஸ்டிஸ் ப்ரின்ஸெப்ஸ் அக்கிராசனாதிபதியாகவும் மஹாராஜா ஸர். ஜோதீந்தர மோஹன் டாகோர், மாஜி ஹைகோர்ட்டு ஜட்ஜ் ஸர். இராமச்சந்திர மித்தர், பாரிஸ்டர் ஸர்

க்ரிப்பித் இவான்ஸ், டிஸ்திரிக்ட் ஜட்ஜ்மிஸ்டர் னைட் ஆகிய நால்வரும் மெம்பர்களாகவு மிருக்கத் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள். இவர்களுடைய ரிபோர்ட்டுக் கிடைத்தபின் இந்தியா மந்திரியவர்கள் இதை விஷயத்தைப்பற்றி முடிவான உத்திரவுசெய்வதாகச் சொல்லியிருக்கிறார்.

---

**ஹைகோர்ட்டு.** சென்னைஹைகோர்ட்டுக்குச் சில வருஷகாலமாக சத்தியாக நியமிக்கப்பட்ட 6-வது ஜட்ஜ் வேலை அடுத்த எப்பிரல் மாசத்திலிருந்து இன்னும் ஒரு வருஷத்திற்கு இருக்க இந்தியாமந்திரியவர்கள் அனுமதி கொடுத்திருக்கிறார்கள். மிஸ்டர் ஜஸ்டிஸ் ஹாண்ட்லி அடுத்த மார்ச்சு மாசத்தோடு வேலையை விட்டு நீங்கிப்போவதாகத் தெரியப்படுத்தி யிருக்கிறார். அவர் அப்படி நீங்கிப்போகும் பக்ஷத்தில் வருகிற எப்பிரல் மாசமுதற்கொண்டு ஒரு வருஷத்துக்கு வேலைபார்த்து வர, சென்னை ஹைகோர்ட்டிற்கு 6-வது ஜட்ஜி யொருவர் நியமிக்க வேண்டிவரும். அவ்வேலைக்கு யாரை நியமிப்பார்களோ தெரியவில்லை. ஹைகோர்ட்டுவக்கீல்களில் தகுதியுள்ள ஒருவரைநியமித்தால் சுதேசிகளுக்கெல்லாம் திர்ப்தியாக விருக்கும். கவர்ன்மெண்டார் சித்தம் எப்படியோ தெரியவேண்டும்.

---

## பிரகடனபத்திரம்.

| | ரூ. | அ. |
|---|---|---|
| பத்துப்பாட்டு நச்சினார்க்கினியருரை | 3 | 0 |
| தபாற்கூலி ரிஜிஸ்திரேஷன்சார்ஜ் | 0 | 6 |
| சீவகசிந்தாமணி நச்சினார்க்கினியருரை | 6 | 0 |
| தபாற்கூலி ரிஜிஸ்திரேஷன் சார்ஜ் | 0 | 8 |
| சிலப்பதிகாரம், அடியார்க்குநல்லாருரை அரும்பதவுரை | 5 | 8 |
| தபாற்கூலி ரிஜிஸ்திரேஷன் சார்ஜ் | 0 | 7 |
| மதுரைக்காஞ்சி நச்சினார்க்கினியருரை | 1 | 0 |
| நெடுநெல்வாடை ,, | 0 | 6 |
| கச்சியானந்தருத்திரேசர் வண்டுவிடுதூது | 0 | 2 |
| திருமயிலைத் திரிபந்தாதி | 0 | 1 |

இப்புத்தகங்களை என்னிடத்தும் இவ்விவேகசிந்தாமணி ஆபீசிலும் முன்பணம் செலுத்தி விலைக்கு வாங்கிக்கொள்ளலாம்.

இங்ஙனம்,
கும்பகோணம்,
கெவர்ன்மெண்டு காலேஜ்,
வே. சாமிநாதையன்.

---